

பெற்ற தாய்தனை மகமறந் தாலும்
பிள்ளை யைப்பெறுந் தாய்மறந் தாலும்
உற்ற தேகத்தை உயிர்மறந் தாலும்
உயிரை மேவிய உடல்மறந் தாலும்
கற்ற நெஞ்சகம் கலைமறந் தாலும்
கண்கள் நின்றிமைப் பதுமறந் தாலும்
நற்ற வத்தவர் உள்ளிருந் தோங்கும்
நமச்சி வாயத்தை நான் மறவேனே.

—திருஅருட்பா.

மார்ச் 1989

# ஸப்தகிரி

தனிப்பிரதி ரூ. 1 மலர் 19

வருடச் சந்தா ரூ. 12 இதழ் 10

## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

முன்னட்டையில் · ஸ்ரீ கபிலேஸ்வரசுவாமி திருக்கோயில் பிரம்மோத்சவக்காட்சிகள் - திருப்பதி.

2 ம் பக்கம் : திருமலை தர்மகிரியில் சதுர்முகப் பிரம்மன் திருவுருவச்சிலை

3-ம் பக்கம் : திருமலையில் தெப்போத்சவம்

பின்னட்டையில் . ஸ்ரீநந்திபெருமான் - திருப்பதி கபில தீர்த்தம் (ஆழ்வார் தீர்த்தம்)

சிறப்பாசிரியர்

திரு. சி.எச். வெங்கடபதிராஜு I.A.S., செயலாட்சித் தலைவர், தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

அச்சிடுபவர்

திரு. எம். விஜயகுமார் ரெட்டி, மேலாளர், தி.தி. தேவஸ்தான அச்சகம், திருப்பதி.

ஆசிரியர்

திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர்:

திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு.

EDITOR,
" Sapthagiri "
T. T. Devasthanams,
TIRUPATI.

# உங்களுடன் . . . .

''ஸ ப்ரம்மா ஸ சிவ ஸேந்த்ர: ஸோக்ஷர: பரம: ஸ்வராட்
ஸ ஏவ விஷ்ணு: ஸ பிராண: ஸ காலோக்னி: ஸ சந்த்ரமா''

என்று உபநிஷத் அருளியுள்ளபடி, சராசரங்களையெல்லாம், அதிலுள்ள பிரம்மாண்ட கோடி உயிர்களையெல்லாம், தத்தம் வினைவழி வாழ்வித்துக் கொண்டு, கண்ணிற்குப் பார்வையும், கருத்திற்கு ஞானத்தையும் அளித்து, ஒலிகளுக்கெல்லாம் பேரொலியாய் ஒளிரும் அம்மூலப்பரம்பொருளே, படைத்தல், அளித்தல், அழித்தல் தொழில்களை மேற்கொள்ளும் பிரம்மா, விஷ்ணு, சிவனாக விளங்கி. இந்திராதி தேவர்களின் உருவங்களாகவும், எங்கும், எதிலும், எப்போதும் நிறைந்து, அருவ-உருவ-அருவுருவங்களில் வழிபடப்படுகின்றான். ''இருள்சேர் இருவினையுஞ் சேரா இறைவன்'' என்று வள்ளுவமும், 'வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்க' இருவினையும் தீயினில் தூசாகும் என்று பாவையும் புகழ்ந்தேத் தும் அப்பரம்பொருள் ஒன்றே அவன் உருவங்களும் நாமங்களும்தான் பல என்பதை அன்றே 'ஏகம் ஸத் விப்ரா பஹுதா வதந்தி' என்று வேதம் அறுதியிட்டுக் கூறியுள்ளது. இறைவனை அப்பரஞ்சோதியை பல பெயர்களில் வழிபட்டு, அவனுடைய அரும்பெருங்குணங்களை-ஆற்றல்களை பல தத்துவ விளக்கங்களில் கண்டு ஆன்ம அறிவினைப் பெருக்கிக் கொள்வதே இந்து சமயத்தின் பெருமையாகும். இத்தகு சமயத் தலைவனாகி. உயிர்களின் அணுவிற்கு அணுவாய் உள்ளும் புறமும் இலங்கி, இயக்கி ஞானம், சக்தி, தேஜஸ், செல்வம் போன்ற கல்யாண குணங்களைக் கொண்டு விளங்கும் அப்பேரறிவாளனைத் தங்கள் தலைவனாகக் கொண்டு திகழும் சமயங்களுள் இரு கண்களாக விளங்குவன வைணவமும், சைவமும் ஆகும்.

இவ்விரு சமயங்களும், ஓர் ஊரைப் பிரித்துச் செல்லும் இரண்டு பாதைகள் அல்ல. அவை ஊர் ஒன்றுக்கு இட்டுச் செல்லும் இரண்டு ராஜவீதிகளாகும். இவ்விரண்டு ராஜவீதிகளில் நடந்து சென்ற அன்றைய ஆன்றோர் யாரும் சுய விளம்பரத்திற்காகவோ-ஆதாயத்திற்காகவோ தங்களுக்குள் தங்கள் நிலை தாழ்ந்து சண்டையிட்டுக் கொள்ளவில்லை. கருத்து வேறுபாடுகள் நிலவினும் அவையாவும் குறை களைந்து நிறை கண்ட ஓர் ஆரோக்யமான வளர்ச்சிக்கே வழி கோலியது. இங்கு ஜாதிகள் அலசப்படவில்லை; நிறங்கள் பார்க்கப்படவில்லை. அதனால்தான் அவர்கள்தம் தத்துவ விளக்கங்கள் மற்றையோருக்கு விளக்குகளாகத் திகழ்ந்தன. மேலும் உலக மொழிகளில் 'பக்திக்குத் தமிழ்' எனும் பெருமை தமிழுக்குக் கிடைத்தது.

நாயன்மார்களும், ஆழ்வார்களும் தங்கள் பனுவல்களில் தங்கள் கடவுளர்களை உயர்த்திப் பேசியுள்ளதைப் பார்க்கின்றோம். ஏன் அவர்களில் சிலர் சங்கரனையும் சாரங்கனையும் ஒன்றே என்றும் வலியுறுத்தியுள்ளனர். புராணங் களும், இதிஹாஸங்களும் அவர்களை இணைத்தே பல கதைகளையும், காட்சிகளையும் நமக்கு அளித்திருக்கின்றன. அவற்றில் விளக்கப்பட்டிருக்கும் சிவ லீலைகளும், கிருஷ்ண லீலைகளும் நமக்கு வாழ்க்கை உண்மையை-தர்மத்தின் பெருமையை-சத்தியத்தின் சிறப்பினை-மனிதனின் மாண்பினை உணர்த்தவே வந்தன தவிர, சமயக் காழ்ப்புணர்ச்சிக்கு வித்திட அல்ல.

இவ்வகையில் அழித்தற் கடவுளாகப் போற்றப்படும் அவ்வுமையொரு பாகனின் பெருமையை இச்சிவராத்திரி மாதத்தில் சற்றே எண்ணி நம் ஆன்மீகத் தாகத்தினைச் சிறிதே ஆற்றிக் கொண்டு, இந்து சமயப் பெருமையினைத் தன் நோக்கில் சிறப்பித்திடும் சைவத்தின் அருமையை அறிந்திடுவோம்.

இறைவன், உயிர், தளை ஆகிய முப்பொருள்களின் உண்மைகளை விளக்கி, உயிர், தளைகளைவிட்டு அப்பேரறிவான இறைவனை அடைவதற்கான வழிகளையும், அதனால் அடையப்பெறும் பயன்களையும், தோத்திரங்கள் மற்றும் சாத்திரங்கள் வழியாக பன்னிரு திருமுறைகளும் தீந்தமிழ் ஞானப்பனுவல்களும் நமக்கு விளக்கிக் கூறுகின்றன. கல்லார்க்கும், கற்ற வர்க்கும் களிப்பருளும் அவ்ஆடல் நாயகனை-இவ்வுலக உயிர்களுக்கு அம்மையும் அப்பனுமாகத் திகழும் அவ் ஐந்தெழுத்து நாயகனை அவ்அபிஷேகப் பிரியன், மனைவி மக்களைப் பிரிந்து குளிர்ந்த பனிமலைவிட்டு, சுடும் சுடுகாட்டில் சாம்பலையே அடையாகக் கொண்டு, ஓடுகளையே மாலையாகக் கொண்டு, விளங்குவதன் மூலம் மக்களின் நிரந்தரமான மரண பயத்தினை விலக்கி, நிலையாமைத் தத்துவத்தை விளக்கிடும் பாங்கு நமது ஆன்ம பலத்தை வளர்க்கவே செய்யும். சிருஷ்டி, ஸ்திதி. சம்ஹாரம், திரோதனம், அனுக்கிரகம் எனும் ஐந்தொழில்களைத் தன் கருணை காரணமாகப் புரிந்திடும் அம்மூல பரம்பொருளின் மறு உருவமான அவ்ஆடலரசனின் பெருமைகூறும் ஐந்தெழுத்தின் சிறப்பினை வேதமே விதந்தோத்து கிறது. 'தாரித்ரய துக்க தஹனாய நமச்சிவாய' எனும் வசிஷ்டரின் கூற்றினை 'வேதம் நான்கினும் மெய்ப்பொருளாவது நாதன் நாமம் நமச்சிவாயவே' என்று சம்பந்தரும், 'பழுத்தன ஐந்தும் பழமறையினுள்ளே என்று திருமூலரும் தங்கள் வாக்கினால் உறுதிப்படுத்துகின்றனர்.

பிறவாயாக்கைப் பெரியோன், நுதல் விழி நாட்டத்திறையோன் என்று புலவாறு சங்க இலக்கியம் புகழும் அச்சிவனார் வழிபாடு அன்று திருநெறி, மெய்நெறி என்று அழைக்கப்படுவதன் மூலம் அவ்வழிபாடு மக்களைச் செம்மையுறுத்தும் ஓர் இயக்கமாகவே விளங்கி வந்துள்ளது என்பது தெள்ளிதின் விளங்கும். ஒற்றுமையில் வேற்றுமை பாராட்டாது, வேற்றுமையில் ஒற்றுமை கண்டு உயர்ந்தது, வளர்ந்தது இந்து சமயம். இன்று அதன் பெருமைக்கும் சிறப்பிற்கும் தனிப்பட்டவர்களோ, தனி இயக்கங்களோ மாசு கற்பிக்கலாம். ஆனால் எதிர்ப்புகளிடையே எதிர் நீச்சல் போட்டே பழக்கப்பட்ட இந்து சமயத்தின் ஒரு பிரிவான, ஆன்மீகம் மணக்கும் தமிழ் போற்றும் சைவ சமயத்தின் பெரு மையை உணர்ந்து 'ஆதிப்பிரானும் அணிமணிவண்ணனும்; ஆதிக்கமலத்து அலர் மிசையானும்; சோதிக்கில் மூன்றும் தொடர்ச்சியில் ஒன்று எனார், பேதித்து உலகம் பிணங்குகின்றார்களே' என்று கூறும் திருமூலரின் ஆதங்கத்தை அகற் றிடும் வகையில், 'மன்னுமொரு தெய்வத்தின் சக்தியாலே, வையகத்தில் பெரும் பொருளெல்லாம் சலித்தல் கண்டாய்' என்று பாரதி கூறும் உண்மைக்கு உரம் ஏற்றுவோம்; உயர்கதி பெறுவோம்.

# செய்திச் சுருக்கம்

திருமலையில் :

19-2-89 அன்று ஆந்திர மாநிலத்தின் புதிய அறநிலையத்துறை அமைச்சர் திரு. கே. அப்பல நாயுடு அவர்கள் திருமலைக்கு வருகை புரிந்தார். இதுபோது, ஆந்திர மாநிலத்தில் உள்ள கோயில்களுக்குச் சொந்தமான வருவாய் தர முடியாத காலி நிலங்களை அரசுக்கு விலைக்கு வழங்கினால், அவை அரசு வீட்டு வசதி திட்டத்திற்குப் பயன்படுத்திக் கொள்ள பயனுள்ளதாக அமையும் என்று கூறினார். மேலும் அடுத்த 7 ஆண்டுகளுக்குள் மாநிலத்தில் உள்ள சுமார் 60,000 கோயில்களைப் புதுப்பிக்கும் பணி முடியும் என்றும், தற்போது 30 சதவிகித கோயில்கள் மிகவும் பழுதடைந்த நிலையில் உள்ளன என்றும் குறிப்பிட்டார்.

ஃ ஃ ஃ

ஆந்திர மாநில உயர்நீதி மன்றத்தின் தலைமை நீதிபதி திரு. யோகேஸ்வர தயாள், நீதிபதி திரு. ஜெய சந்திரா ரெட்டி ஆகியோர் 19-2-89 அன்று திருமலைக்கு வருகை புரிந்து இறைவனைத் தரிசித்தனர். 18-2-89 அன்று பஞ்சாப் மற்றும் அரியானா மாநில உயர்நீதி மன்ற தலைமை நீதிபதி திரு ராமசுவாமி அவர்களும் திருமலைக்கு வருகை புரிந்தார்.

ஃ ஃ ஃ

இந்தியத் துணைக்குடியரசுத் தலைவர் டாக்டர். சங்கர் தயாள் சர்மா அவர்கள் 16-2-89 அன்று திருமலைக்கு வருகை புரிந்து இறைவனைத் தரிசித்தார். அன்று மாலை திருமலை ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதியில் நிருபர்களுடன் உரையாடுகையில், திருப்பதிக்கும் திருமலைக்கும் மின்சார உந்து வண்டிகளைப் பயன்படுத்துவதன் அவசியத்தைக் குறிப்பிட்டார். மேலும் திருமலையிலும், அதைச் சுற்றிலும் தூய்மையான சூழ்நிலை நிலவ வேண்டியதைப் பற்றியும் பேசினார்.

ஃ ஃ ஃ

ஹைதராபாத்தைச் சார்ந்த சூர்ய லக்ஷ்மி காட்டன் மில்ஸ் மற்றும் சூர்யவன்ஷி ஸ்பின்னிங் மில்ஸ் உரிமையாளரான திரு. டி. என். அகர்வால் அவர்கள், தி. தி. தேவஸ்தானம் திருமலையில் நடத்தி வரும் அன்னதான திட்டத்திற்கென ரூ. 10 இலட்சம் வழங்கியுள்ளார்.

ஃ ஃ ஃ

மால்கானைச் சார்ந்த மோதிலால் கிரிதாரிலால் அகர்கார் நிறுவனத்தாரிடமிருந்து ரூ. 13,30,000 பெறுமான 6 இலட்சம் கிலோ கிராம் எடையுள்ள டைமண்ட் கற்கண்டினை வாங்குவதென முடிவு செய்துள்ளது.

ஃ ஃ ஃ

வனௌஷாதி சாம்ராட் டாக்டர். பாலராஜ் மகரிஷி அவர்கள் தி. தி. தேவஸ்தான ஆயுர்வேத துறைக்கான சிறப்பு ஆலோசகராக இரண்டாண்டுகளுக்கு நியமிக்கப்பட்டுள்ளார். இதுபோது, திருமலைக் காடுகளில் மூலிகைகள் வளர்க்கவும், மருத்துவ ஆராய்ச்சிகள் மேற்கொள்ளவும் ஆயுர்வேத சம்பந்தப்பட்ட நூல்களை எழுதவும் அவருடைய ஆலோசனைகள் ஏற்றுக் கொள்ளப்படும். இவ்விரண்டு ஆண்டுகளின்போது திருமலையில் இலவசமாக தங்கவும், சிறப்புத் தரிசன வசதியும் அவருக்கு வழங்கப்படும்.

ஃ ஃ ஃ

இறைவனின் ஊஞ்சல் சேவையானது பொது மக்கள் இலவசமாக கண்டுகளிக்கும் வகையில், திருமலையில் கொலுவு மண்டபத்தில் வாரத்தில் நாட்களுக்கு நடைபெறும். வெள்ளிக்கிழமை நடைபெறும் ஊஞ்சல் சேவை ஆர்ஜித சேவையாக கோவிலுக்குள் நடைபெறும்.

ஃ ஃ ஃ

உதவி மக்கள் தொடர்பு அலுவலர் எனும் பதவி ஒன்றினை ஏற்படுத்தும் வகையில் தீர்மானம் ஒன்றினை தி. தி. தே. மேலாண்மை ஆந்திர அரசுக்கு சிபாரிசு செய்துள்ளது.

ஃ ஃ ஃ

திருமலையில் இறைவனுக்கு ஆர்ஜித சேவை நடத்தும் கிருஹஸ்தர்களுக்கு பட்டு வஸ்த்ரம் ஒன்றினை வழங்கிடும் வகையில் ஆண்டு ஒன்றுக்கு ரூ. 18,00,000 ஒதுக்குவதென்று மேலாண்மை முடிவு செய்துள்ளது.

ஃ ஃ ஃ

திருமலையில் தர்மகிரியில் தி.தி.தே. மேலாண்மையின்கீழ் செயற்படும் வேத விக்ஞான பீடத்தில் பணிபுரியும் முதல்வர் மற்றும் விரிவுரையாளர்கள் தங்கிடும் வகையில் குடியிருப்புகள் கட்டுதற்கென ரூ. 21.70 இலட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது.

*



# ஸ்ரீ அருணகிரிநாதர் புகழ்ந்த திருவயலூர்

*(தங்களது 'ஸப்தகிரி' டிசம்பர் இதழ் 1988, 29-ஆம் பக்கத்தில் பிரசுரித்துள்ள 'அருணகிரி நாதர் புகழ்ந்த திருவயலூர்' என்ற கட்டுரை என்னைப் போன்ற முருக பக்தர்களுக்கும், அருணகிரி நாதர் அடியார்களுக்கும் மிகுந்த வேதனை அளித்துள்ளது. ஆசிரியர் முன்னுக்குப்பின் முரணான கருத்துக்களையும் கதையும் கூறுகிறார். அவர் கட்டுரையில் எழுதி இருப்பது முற்றும் தவறு. ஸ்ரீ அருணகிரி நாதர் முதன் முதலில் முத்தைத் தருபத்தித் திருநகை என்று பாடிய இடம் அண்ணாமலை. அதன் பின்பு அவர் அங்கிருந்து தான் வயலூர் சென்றார். வயலூரில் இருந்து விராலிமலை வந்தார். விராலிமலையில் இருந்து வயலூர் அல்ல. எனவே அடியேன் அதை விளக்கமாக-சுருக்கமாக 3 பக்கங்களில் எழுதி உள்ளேன். இதனைப் பிரசுரித்து தாங்கள் உண்மை வரலாற்றை மக்கள் மனதில் நிலைக்கச் செய்வீர்கள் என்று நம்புகிறேன்.)*

உடன் பிறந்த தமக்கை கூறத்தகாத வார்த்தை கூற (ஆதி) அதனால் மனம் ஒடிந்த அருணகிரிநாதர், 'இனி இவ்வுடல் பெற்று வாழ்வதில் பயனில்லை. என்றும் அழியாப் பழிக்கு ஆட்கொண்டுவிட்ட நான் உயிர் வாழலாகாது' என்று முடிவு செய்து திருவருணை அருணாச்சலேஸ்வரர் ஆலயத்தில் உள்ள வல்லாள மகாராஜா கோபுரத்தின் மீது ஏறி கீழே குதித்து உயிர்விடத்தீர்மானித்துக்குதித்தார். கருணையே வடிவான முருகப்பெருமான் அருணகிரியை இரு கரத்தாலும் தாங்கிப் பிடித்துக் காத்தருளினார். அத்தோடு அல்லாமல் அவரை நாதா என்று அழைத்து அருணகிரிநாதர் ஆக்கினார். சும்மா இரு என்று சொல்லி அமர்த்தி மறைந்தார் முருகன்.

> ''சும்மா இரு சொல் அற என்றலுமே
> அம்மா பொருள் ஒன்றும் அறிந்
> திலனே''
>
> *(கந்தர் அனுபூதி)*

இதனை மேலே கண்டவாறு அனுபூதியில் பின்பு அறிவிக்கிறார் அருணகிரிநாதர். அங்ஙனம் அருணகிரி நாதரை தடுத்தாட்கொண்டதற்கு அடையாளமாகவிளங்கும் சன்னதியே திருவருணையில் இன்றும் உள்ள கோபுரத்திளையனார் சந்நிதி ஆகும்.

மூன்று நாட்கள் அருணகிரிநாதர் கண்களை மூடி நிட்டையில் அமர்ந்தார். மூன்றாவது நாள் முருகப்பெருமான் அவர்முன் தோன்றி 'அருணகிரி நாதா எம்பால் திருப்புகழ் பாடு' என்று பணித்தார்.

'தேவாதி தேவனே கல்வியறிவும், இலக்கணமும் கற்றுப்பெறாத அடியேன் நும் பெருமையை எங்ஙனம் பாடுவேன்' என்று இயம்ப, 'அருணகிரி நாத நும் நாவை நீட்டுக' என்று பணித்தார் முருகன். அருணகிரிநாதர் நாவை நீட்ட தமது வேலால் முருகப் பெருமான் அவர் நாவில் பிரணவ மந்திரத்தை எழுதியும் சடாச்சரத்தை உபதேசித்தும் 'அருணகிரி நாதா முத்து முத்தாய்ப் பாடுக' என்று கூறிய மாத்திரத்தில் கடல் மடைதிறந்த வெள்ளம்போல் அருணகிரி நாதர்,

> ''முத்தைத் தரு பத்தித் திருநகை
> அத்திக்கிறை
> சக்திச் சரவண முக்திக்கொரு
> வித்துக் குருபரன் எனவோதும்''

என்று தொடங்கி,

> கொத்துப்பட ஒத்துப்புரவல
> பெருமாளே''

என்பது வரை பாடி முடித்தார். இதுதான் அருணகிரிநாதர் பாடிய முதல் பாடல். பாட அடி எடுத்து தந்தது முருகப்பெருமான். பாடிய இடம் அண்ணாமலை ஆகும். கட்டுரையில் குறிப்பிட்டதுபோல் வயலூர் அல்ல.

திரு. பி. சோமசுந்தரப் பெருமாள்,
தங்கவயல்.

அதன் பின்பு முருகன் அருணகிரி நாதரை வயலூருக்கு வா என்று கூறி மறைந்தார். திருச்சிராப்பள்ளிக்கு மேற்கே உள்ளது வயலூர் என்பது சரி. வயல்கள் சூழ நடுவில் ஆலயம் அமைந்திருப்பது இப்பதிக்கு வயலூர் என்ற பெயர் பொருந்தியது. அருணகிரிநாதர் வயலூர் அடைந்து திருக்குளத்தில் மூழ்கி ஆலயத்துள் சென்று அங்குறையும் பொய்யாக் கணபதி, அக்னீஸ்வரர் அம்பாள், வள்ளி தேவயானையுடன் விளங்கும் முருகப்பெருமானை வாழ்த்தி வணங்கி மீண்டும் பொய்யாக் கணபதியின் சன்னதியில் வந்து அமர்ந்தார். அந்த

### தர்மம்

தர்மம் என்று எதைப் பிரஸித்தமாய் சொல்கிறார்களோ அது பொருளால் நடைபெறுகின்றது. எவனுடைய பொருளை எவன் அபகரிக்கின்றானோ அவனுடைய தர்மத்தை அவன் அபகரிக்கின்றான். பொருளானது அபகரிக்கப்படும்பொழுது நாம் எதைப் பொறுக்க முடியும்? உலகத்தில் பொருளில்லாமை பாதகம். —மகாபாரதம்.

—ஸ்ரீதர்.

### தி. தி. தேவஸ்தானததாரின்

## ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில், திருச்சானூர்

### தினசரி நிகழ்ச்சி நிரல்கள்

**காலை**

| | | | | |
|---|---|---|---|---|
| 5-00 | முதல் | 5-30 | வரை | —சுப்ரபாதம் |
| 5-30 | ,, | 6-00 | ,, | —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ. 6-00 (நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்) |
| 6-00 | ,, | 6-30 | ,, | —சுத்தி—முதல்மணி |
| 6-30 | ,, | 11-30 | மதியம் | —ஸர்வதரிசனம் |
| 11-30 | ,, | 12-30 | ,, | —சுத்தி, 2-வது மணி |
| 12-00 | ,, | 6-00 | மாலை | —ஸர்வதரிசனம் |
| 6-00 | ,, | 6-30 | ,, | —சுத்தி, 3-வது மணி |
| 6-30 | ,, | 9-15 | இரவு | —ஸர்வதரிசனம் |
| 9-15 | ,, | 9-30 | ,, | —சுத்தி, ஏகாந்தசேவை |

### வெள்ளிக்கிழமைகளில்

**காலை**

| | | | | |
|---|---|---|---|---|
| 9-00 | ,, | 10-00 | ,, | —அபிஷேகம் (ரூ. 100/- செலுத்தி இரு நபர்கள் பங்கேற்கலாம்) |
| 9-00 | ,, | 10-00 | ,, | —அபிஷேக தரிசனம் (ரூ. 2/- நபர் ஒருவருக்கு) |

### ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

1 தரிசனம்—சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 5/- (நபர் ஒருவர்க்கு)

| ஆர்ஜித நைவேத்தியங்கள் | | | ஆர்ஜித சேவைகள் | |
|---|---|---|---|---|
| (அ) பொங்கல் | ,, | ரூ. 110/- | (அ) திருச்சி உற்சவம் | ரூ. 63-00 |
| (ஆ) புளியோரை | ,, | ரூ. 100/- | (ஆ) யானை வாகனம் | ரூ. 82-00 |
| (இ) தத்யோதனம் | ,, | ரூ. 75/- | (இ) தோலோற்சவம் | ரூ. 160/- |
| (ஈ) கேஸரிபாத் | ,, | ரூ. 180/- | (வெள்ளிக்கிழமைகளில் மட்டும்) | |
| (உ) சர்க்கரைப் பொங்கல் | ,, | ரூ. 135/- | (ஈ) திருப்பாவாடை (கிருஹஸ்தர்க்கு 5 கிராம் எடையுள்ள வெள்ளிடாலர் கொடுக்கப்படும்) | ரூ. 2000/- |
| (ஊ) தோசை | ,, | ரூ. 300/- | (அர்ச்சனை(அஷ்டோத்ரம்)செய்ய விரும்பும் பக்தர்கள் அதற்கான ரூ. 1-50க்கான டிக்கெட்டினைக் கோயிலிலேயே வாங்கிக் கொள்ளலாம். இதுபோது பக்தரின் பெயரும், கோத்ரமும் வாசிக்கப்படும்) | |
| (எ) ஸாகரபாத் | ,, | ரூ. 150/- | | |
| (ஏ) ஸீரா | ,, | ரூ. 300/- | | |

* திருப்பதியிலிருந்து 5 கி. மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதியுண்டு.

பொய்யாக் கணபதியார் அருளினால் தான் அருணகிரிநாதர் திருப்புகழ் பாடத் துவங்குகிறார்.

பொய்யாக் கணபதி அருணகிரி நாதருக்கு மயில், கடப்பமலர், வேல், சேவல், முருகன் இரு சீரடி அவரது பன்னிரு தோள்களுடன் இவ்வயலூரையும் வைத்து பாடுக என்று அருள் புரிந்தார். அவ்வண்ணமே அருணகிரிநாதர் “அருளிர் சீர் பொயாத கணபதி திருவக்கீசன் வாழும் திரு வயலி” என்றும் ‘செய்ப்பதியும் வைத்துயர் திருப்புகழ் விருப்பமோடு செப்பென எனக்கருள்கை-மறவேனே’ என்று விநாயகர் துதியிலும் வைத்து பாடுவதோடு அல்லாமல் வயலூரைப் பலப்பல பாடல்களில் காணலாம்.

அங்கு உறையும் அக்னீஸ்வரப் பெருமானும் அருணகிரிநாதருக்குத் திருப்புகழ் பாடுவதற்குரிய அநுக்கிரகம் புரிகிறார். அதன்பின் முருகப்பெருமான் அருணகிரிநாதருக்குத் திருவடி தீட்சை செய்வித்து அருணகிரிநாதா எமது விராலிமலைக்கு வருக பணித்தார். அப்படிப் பணித்ததோடு அல்லாமல் முருகனே வேடன் வடிவில் வந்து அருணகிரிநாதர் வயலூரில் இருந்து விராலிமலைக்குச் செல்ல வழி காட்டியதோடு அல்லாமல் வழித் துணையாகவும் அவ்வூர் அருகாமை வரை வந்துதவி புரிகிறார். இப்படி அருணகிரிநாதர் வயலூரில் இருந்து தான் விராலிமலைக்குச் சென்றாரே தவிர, விராலிமலையில் இருந்து வயலூருக்கு அல்ல. அருணகிரிநாதர் திருப்புகழ் என்ற பெயரில் விநாயகர் துதிகள் முழுவதும் பாடிய இடம் வயலூர்தானே தவிர வேறு எங்கும் அல்ல. வயலூர் இடம் பெறுவதை “நாகவிந்து கலாதி” சேத்திரக் கோவை முதல் பலப்பாடல்களில் அறியலாம். இதுதான் அருணகிரி நாதரது உண்மை வரலாறு ஆகும். அருணகிரிநாதர் பெருமை சொல்லற்பாலது என்று கூறி அவரை வணங்கி உய்வோமாக.

*

# மதிப்புரை

ஆண்டாள் அருளிச் செய்த திருப்பாவை:

*(ஸ்ரீ உத்தமூர் திருமலை நல்லான் சக்கரவர்த்தி வீரராகவாச்சார்யர் இயற்றிய ப்ரபந்த ரக்ஷை என்னும் உரையுடன்); 1986; பிரசுரித்தவர்: விசிஷ்டாத்வைத பிரசாரிணீ சபா, 27, வெங்கடேச அக்ரஹாரம், சென்னை—600004; பக்கங்கள் 162; விலை. ரூ. 12.*

பரமனின் அருள் வெள்ளத்தில் தாமும் ஆழ்ந்து பிறரையும் ஆழ்விக்கும் ஆழ்வார்கள் பன்னிருவருள் ஆண்டாள் மட்டுமே பெண்ணினம். பூமியிலிருந்து கிடைக்கப்பெற்றவளான ஸ்ரீராமனின் மனைவிக்கு எவ்வாறு 'சீதா' எனப் பெயரோ, அவ்வாறே கருப்பை எதனிலும் பிறக்காதவளும் தூய்மை மிகுந்தவளும் பூமிதேவியிடத்துக் கிடைத்தவளுமான ஆண்டாளுக்கு, 'கோ'—பூமியினால், 'தா'—அளிக்கப்பட்டவள் என்பதைக் குறிக்கும் 'கோதா' என்னும் பெயரும் நிரம்பப் பொருத்தமுடையதே ஆகும்.

பரமன் ஒருவனே நாயகன், ஏனைய உயிர்கள் யாவும் நாயகியரே என்னும் கருத்தினைக் கொண்ட பக்தி வகை 'மதுர பக்தி' எனப்படுவதாகும். பிற ஆழ்வார்கள் பெண்மையைத் தம் மேல் ஏற்றிக் கொண்டு, நாயகனை இறைவனிடம் காதல்மீதூர்ந்து பாடிப்பரவினர். ஆயினும், இயல்பாகவே நாயகியாக அவதரித்து, இன்னிசையால் திருப்பாவைப் பல்பதியம் பாடிச் சூடிக்கொடுத்த சுடர்க்கொடி ஆண்டாளின் பக்தி நனி சிறப்புடையதாகும் என்பர் பெரியவர்.

பாதகங்கள் தீர்க்கும், பரமனடி காட்டும், வேதமனைத்திற்கும் வித்தாகும் ஐயைந்தும் ஐந்துமான கோதை தமிழ்த் திருப்பாவை, ஆழ்வார்களின் அருளிச் செயல்களான திவ்யப்பிரபந்த ஆரத்தில் ஒரு முகப்பு மணியாகும் என்பது மிகையாகாது. பூமாலையினாலும், பாமாலையினாலும் பரம்பொருளையே தன் வசப்படுத்திக் கொண்ட பெரியாழ்வார் பெற்றெடுத்தப் பெண்பிள்ளை, உயரரங்கற்கே கண்ணி உகந்தளித்த, அன்ன வயற்புதுவை ஆண்டாள், சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்களைப் போன்ற எத்துணை எளியவரும் மனம் நெகிழ்ந்து மங்கையுறை மார்பனைப் போற்றிப் பாடினால் நாடும் சமூகமும் செழித்து விளங்குவதோடுகூட, இறைவனின் இயல்பான, காரணமற்ற கருணைக்கும் பாத்திரமாகக்கூடும் என்பதை அழகுடன் எடுத்துக் காட்டியிருக்கிறாள்.

இத்தகைய உயர்ந்த பாவைப்பனுவல்களுக்கு உரைவளம்கூட்டிய பெருமக்கள் பலர். வியாக்கியான சக்கரவர்த்தி எனப் போற்றப் பெறும் பெரியவாச்சான் பிள்ளையின் மூவாயிரப்படி, அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரின் ஆறுயிரப்படி, உபநிஷத் பாஷ்யகார ஸ்ரீ ரங்க ராமானுஜ ஸ்வாமிகளின் சம்ஸ்கிருத வியாக்கியானம், பெரிய பரகால ஸ்வாமிகளின் உரை ஆகியன முதலாக, பி. ஸ்ரீ. ஆச்சார்யாவின் விளக்கவுரை ஈறாகப் பல உரைகள் உள்ளன. வேத மரபிற்கிணங்கவும் வைணவ ஆசாரங்களைச் சிறிதும் வழுவின்றியும் நம்மிடையே வாழ்ந்து காட்டிய 'சம்ஸ்கிருத தாத்தா' என்று போற்றப் பெற்ற மாபெரும் வித்துவான் உத்தமூர் திருமலை நல்லான் சக்கரவர்த்தி வீரராகவாச்சார்யர் திவ்ய பிரபந்தம் முழுவதற்குமே ப்ரபந்த ரக்ஷை என்னும் மிக விரிவான உரை ஒன்றை எழுதியுள்ளார். இப்பெரும் புலவர் திருப்பதி கீழ்க்கலை ஆய்வுக் கழகத்தில் சில ஆண்டுகள் பணியாற்றியுள்ளார் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். திருப்பாவைக்கான அவ்வுரையுடன் இந்நூல் பதிப்பிக்கப் பெற்றுள்ளது.

திருப்பாவைக் கருத்துக்களின் வேதாந்த உட்பொருளையும், ஏற்றத்தையும் வேதங்கள், வேதாந்தங்கள், உபநிஷத்துக்கள், புராண இதிகாசங்கள், உடையவர் நூல்கள், தேசிகப்பிரபந்தம் போன்றவற்றிலிருந்து மேற்கோள்கள் காட்டி, மிக்க விரிவாகவும், தெளிவாவுகம், உள்ளத்திலே நன்கு பதியும் வகையிலும் உரையாசிரியர் எழுதியிருப்பது அவருடைய பன்முகப் புலமையினை எடுத்துக்காட்டுவதோடு, இவ்வுரையின் அருஞ் சிறப்பாகவும் விளங்குகிறது.

மதராஸ், சுந்தரம் சாரிடீஸ் பொருளுதவியுடன் வெளியிடப்பட்டிருக்கும் இம் மறுபதிப்பு, தெய்வத்தின் அருளையும் தமிழின் இனிமையையும் ஒருங்கே அனுபவிக்க விரும்பும் ஒவ்வொருவரின் இல்லத்திலும் இருக்க வேண்டியது அவசியமாகும்.

**அ. நடராஜன்**
**திருப்பதி.**

## தாமிரச் செம்பு

தாமிரச் செம்பு கிணற்றில் பத்து வருஷங்கள் கிடந்துவிட்டது என்றால் அதை எவ்வளவு தேய்த்தாக வேண்டும்? எவ்வளவுக்கு எவ்வளவு தேய்க்கிறோமோ அவ்வளவுக்கு அது வெளுக்கிறது; சுத்தமாகிறது. இவ்வளவு வருஷ காலம் எத்தனைக் கெட்ட காரியங்களைச் செய்து நம்முடைய சித்தத்தில் அழுக்கை ஏற்றுக் கொண்டு விட்டோமோ அந்த அழுக்கைப் போக்க அத்தனை நல்ல காரியங்களைச் செய்துதான் ஆக வேண்டும். நல்ல கர்மானுஷ்டங்களைச் செய்ய வேண்டும். அதனால் சித்த சுத்தி ஏற்படும், நல்ல ஒழுக்கமும் உண்டாகும். —ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்.

—ஸ்ரீதர்.

# 1989-ஆம் வருட நாட்காட்டி

## மாதங்கள்

## தேதிகள்

| தேதிகள் | | | | | | ஜனவரி அக் | பிப் மார்ச் நவம் | ஏப் ஜூலை | மே | ஜூன் | ஆகஸ்ட் | செப் டிச |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 8 | 15 | 22 | 29 | | ஞாயிறு | புதன் | சனி | திங்கள் | வியாழன் | செவ்வாய் | வெள்ளி |
| 2 | 9 | 16 | 23 | 30 | | திங்கள் | வியாழன் | ஞாயிறு | செவ்வாய் | வெள்ளி | புதன் | சனி |
| 3 | 10 | 17 | 24 | 31 | | செவ் | வெள்ளி | திங்கள் | புதன் | சனி | வியாழன் | ஞாயிறு |
| 4 | 11 | 18 | 25 | * | | புதன் | சனி | செவ் | வியாழன் | ஞாயிறு | வெள்ளி | திங்கள் |
| 5 | 12 | 19 | 26 | * | | வியாழன் | ஞாயிறு | புதன் | வெள்ளி | திங்கள் | சனி | செவ்வாய் |
| 6 | 13 | 20 | 27 | * | | வெள்ளி | திங்கள் | வியாழன் | சனி | செவ்வாய் | ஞாயிறு | புதன் |
| 7 | 14 | 21 | 28 | * | | சனி | செவ் | வெள்ளி | ஞாயிறு | புதன் | திங்கள் | வியாழன் |

**பார்வைக்கு :** ஜனவரி மாதம் 27-**ஆம்** தேதிக்கான கிழமை என்ன என்று அறிய, 27-**ஆம்** தேதிக்கு எதிரில், ஜனவரி மாதததின் அடியில் உள்ள கட்டத்தைப் பார்த்தால் தெரியும் (**வெள்ளிக்கிழமை**).

*திரு. எஸ். சுப்ரமணியன், எம்.ஏ., பி எச் டி*
*சேலம்-6.*

ஆலந்தி:

சென்னை—பம்பாய் ரயில் மார்க்கத்தில் பூனாவிலிருந்து பஸ் மூலமாக இந்த க்ஷேத்திரத்திற்குச் செல்லலாம். மஹான் ஸ்ரீ ஞானேஸ்வரரோடு சம்பந்தப்பட்ட புண்ணிய பூமி இது. அவருடைய ஜீவ சமாதியும் இங்கு விளங்குகிறது.

மஹான் ஸ்ரீ ஞானேஸ்வரரைப் பற்றி அறியாத மஹாராஷ்ட்ர மக்களே இருக்க முடியாது எனச் சொல்லலாம். அவரது சிறந்த நூலான "ஞானேஸ்வரி" இன்றும் அந்நாட்டு மக்கள் நாவில் இடம் பெற்றிருக்கிறது. அற்புதம் நிறைந்த வாழ்க்கை அம்மகானுடையது. விட்டல் பந்த் என்ற ப்ரம்மஞானி ஒருவருக்கு மகனாக அண்ணா நிவ்ருத்தி நாத், தம்பி சோபான் தேவ், தங்கை முக்தாபாய்

இந்நிலையில் ஒரு சமயம், மனைவியை ஊரிலேயே விட்டுவிட்டு காசிக்குச் சென்றார். அங்கு குரு மகானைத் தரிசித்தார். அவ்வளவு தான்; ஏற்கெனவே விரக்தியாக இருந்தவர், அம்மகானையே குருவாக அடைந்து ஞானோபதேசம் பெற்று சந்நியாசியாகவும் ஆகிவிட்டார். இந்தச் செய்தி அவர் மனைவிக்கும் எட்டிவிட்டது. ஒருசமயம், விட்டல் பந்திற்கு உபதேசம் செய்த அந்த மகான், காசியிலிருந்து புறப்பட்டு யாத்திரை மார்க்கமாக வரும்போது இந்தஊருக்கும்வந்தார். விட்டல் பந்தின் மனைவியும் அவரது பெற்றோரும் அம்மகானை வணங்கினர். 'உனக்கு நான்கு புத்திரர்கள் உண்டாகட்டும்' என்று ஆசீர்வதித்தார் அவர். கணவனோ சந்நியாசியாகிவிட்டார். இனி ஏது புத்திரப்பேறு என்று நடந்த

வரும் பிறந்தனர். குரு, இதைச் செய் என்று ஆணையிட்டுவிட்டால் அதற்குப் பிறகு சிந்திப்பதற்கே இடமில்லை என்ற ஒரே எண்ணத்துடன், ஊரார் பழிப்பார்களே என்பதையும் பொருட்படுத்தாது, குரு ஆணைக்காக மிகவும் உயர்ந்த சந்நியாச ஆச்ரமத்தையும் விட்டுவிட்டு வீடு திரும்பியவர்; அப்பேற்பட்ட ஒரு குருபக்த சிரோன்மணிக்குப் பிறந்த குழந்தைகள் ஒதுக்கிவைக்கத் தகுந்தவர்களா? மேலும், உயர்வு என்பது பிறப்பிலா, செய்கைகளிலா, என்பதையெல்லாம் அடியோடு மறந்துவிட்டு, சந்நியாசியாக இருந்தவன் சம்சாரியாக ஆகி பெற்ற பிள்ளைகள் என்பதை மட்டும் பிடித்துக் கொண்டு இவர்கள் நான்கு பேரையும் ஒதுக்கி வைத்துவிட்டனர் ஊர் மக்கள்.

# ஸ்ரீ ஞானேஸ்வரர்

திரு. எஸ். வி. வைத்தியநாதன்,
சென்னை—28.

இவர்களோடு அவதரித்தார் ஞானேஸ்வரர். ஆனால் உண்மை அறியாத ஊரார் இவர்களை "சந்நியாசி பெற்ற பிள்ளைகள்" என்று ஒதுக்கி வைத்து வாயில் வந்தபடி தூற்றியும் வந்தனர்.

அதற்குக் காரணம்?

விட்டல் பந்த் முதலில் இல்லறத்திலேயே ஈடுபடவில்லை. க்ஷேத்ராடனம், மஹான்கள் என்ற தெய்வீகத்தையே அவர் உள்ளம் நாடியது. இருந்தாலும் உறவினர்களின் வற்புறுத்தலுக்கு ஈடு கொடுக்க முடியாமல், திருமணத்திற்கு ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று. ஏதோ காஷாயம் அணியாமல் கன்னியோடு வாழ்கிறானே என்று ஊரார் மகிழ்ந்தாலும், தாமரை இலைத் தண்ணீர் போலவே குடும்பம் நடத்தி வந்தார் விட்டல் பந்த்.

விஷயத்தைச் சொன்னபிறகுதான் அவருக்கு தன் சிஷ்யனை விட்டல் பந்தின் ஞாபகம் வந்தது. அவன் தான் இவர் கணவன் என்று தெரிந்து கொண்டார். உடனே காசிக்குச் சென்றார். விட்டல் பந்த்தை அழைத்து, 'மனைவிக்குத் துரோகம் செய்வது சரியல்ல. உடனே ஊர் சென்று அவளை ஏற்று இல்லறம் நடத்து' என்று கட்டளையிட்டார். குரு வார்த்தைக்கு மறுவார்த்தைப் பேசியறியாது விட்டல் பந்த், குருநாதர் ஆணைப்படியே காஷாயம் களைந்து வெள்ளை வேட்டிக்கட்டி வீடு திரும்பினார். இல்லறத்தில் ஈடுபட்டார்.

இதற்குப் பிறகுதான் உரிய காலத்தில், ஏற்கெனவே மகான் அளித்த ஆசீர்வாதப்படி, நிவ்ருத்தி, ஞானேஸ்வர், சோபான், முக்தா இந்நால்

நான்கு பேரும் வளர்ந்து சிறு பிள்ளைகளானார்கள். வறுமையின் காரணமாகப் பிச்சையெடுத்துப் பிழைக்க வேண்டிய நிலை. சிறு குழந்தைகள் பாவம், கஷ்டப்படுகிறார்களே என்று இரங்கிய ஒரு சிலர் இவர்களுக்குப் பிச்சையிட்டு வந்தனர். ஆனால் நாளாக நாளாக இவர்களுக்கு இரக்கம் காட்டினால், எங்கே நம்மையும் ஊரார் ஒதுக்கி வைத்துவிடுவார்களோ, தூற்றுவார்களோ என்று பயந்து அதையும் நிறுத்திவிட்டனர்.

இந்நிலையில் ஒரு நாள் வீட்டில் எப்பொழுதோ சேகரித்து வைத்திருந்த ரொட்டி மாவு சிறிதே இருந்தது. ஆனால் அதை ரொட்டியாகச் சுட்டுச் சாப்பிடுவதற்கு வசதியில்லை. யாரிடமாவது சென்று ரொட்டி சுட்டு வருகிறேன் என்று கூறி முக்தாபாய் வெளியே சென்றாள். பலரிட

மும் கேட்டுப் பார்த்தாள். சந்நியாசி பெற்ற பிள்ளைக்கு ரொட்டி வேறு வேண்டிக் கிடக்கோ?' என்று சீறி விழுந்தனர். முக்தாவிற்கு துக்கம் பொத்துக் கொண்டு வந்தது. நேரே வீட்டிற்கு ஓடோடி வந்தாள். அண்ணா ஞானேஸ்வரரைக் கட்டிக் கொண்டு புலம்பித் தீர்த்துவிட்டாள். 'ஞானேபா! ஞானேபா! ஏன் இப்படி எல்லோரும் நம்மைக் கரித்துக் கொட்டுகிறார்கள்? மாவு இருக்கிறது. அதை தயவு செய்து ரொட்டியாகச் சுட்டுக் கொடுங்களேன் என்று கெஞ்சினாலும் அடித்துத் துரத்திவிட்டார்கள். பசி தாங்க முடியவில்லையே என்ன செய்வேன் ஞானேபா'' என்று கதறினாள்.

மகா ஞானியாகிய ஞானேஸ்வரருக்கு முக்தாபாய் கதறுவதைக்கண்டு கண்கள் கலங்கிவிட்டன.நாம் கஷ்டத்தைப் பொறுத்துக் கொள்ளவாவது செய்கிறோம். பாவம் குழந்தை முக்தாவினால் இதைத் தாங்க முடியவில்லையே என்று அவள்மீது அனுதாபப்பட்டார். உடனே, 'முக்தா கவலைப்படாதேம்மா. ரொட்டி சுடுவதற்கு அவா உதவல்லேன்னு வருத்தப்படாதே. இதோ என் உடம்பே தாபாக்னியால் ஜ்வலித்துக் கொண்டிருக்கு. என் முதுகிலேயே ரொட்டி சுட்டுவிடேன்' என்று தன் முதுகைக் காட்டினாராம் ஞானேஸ்வர். முக்தாபாயும் அவர் முதுகில் ரொட்டி சுட்டு அடுக்கிவிட்டாளாம். மகா ஞானியாகிய ஞானேஸ்வர் முதுகிலேயே ரொட்டிசுடும்படியான அளவுக்கு சூடு இருக்குமேயானால் அவர் தாபாக்னியால்எவ்வளவுதாக்கப்பட்டிருப்பார், அந்த அளவிற்கு எவ்வளவு கொடுமைகளை இழைத்திருப்பார்கள் ஊரார் என்று எண்ணிக்கூட பார்க்க முடியவில்லை.

'முக்தாபாய் ஞானேஸ்வர் முதுகில் ரொட்டி சுட்ட இடம்' என்றே ஒரு இடம் ஆலந்தியில் இருக்கிறது. அந்த சம்பவம் நடந்த இடத்தை மையமாக வைத்து ஒரு பெரிய மண்டபமாகவே கட்டியிருக்கிறார்கள். 'ஸ்ரீ ஞானேஸ்வர் முக்தாபாய் மந்திர்' என்ற பலகை ஒன்று வெளியே இருக்கிறது. உள்ளே சென்று பார்த்தால் கண்களில் நீர் ததும்பி பார்வையை மறைக்கிறது. எதிரே ஞானேஸ்வர் முதுகைக் காட்டிக் கொண்டு குனிந்து உட்கார்ந்திருக்கிறார். அவர் முதுகில் முக்தாபாய் ரொட்டி சுடுகிறாள்.

இந்த காட்சியை அப்படியே சிலையாகச் செய்து அங்கே வைத்திருக்கிறார்கள். இதற்கடுத்து ஆலந்தியில் காணவேண்டியது ஒரு 'குட்டிச்சுவர்''

ஆம், குட்டிச் சுவர்தான்! குட்டிச் சுவர் என்று ஏளனமாக எதைச் சொல்கிறோமோ அந்த குட்டிச் சுவர் தான் இங்கே தரிசித்து வலம் வந்து வணங்கக்கூடிய ஒரு பொருளாக போற்றிப் பாதுகாக்கப்படுகிறது. காரணம், என்ன புண்ணியம் செய்தோ மகான் ஞானேஸ்வாரோடு சம்பந்தப்பட்டுவிட்டது இச்சுவர். இந்த சம்பவமும் அற்புதமான ஒன்று.

சார்ங்க தேவர் என்பவர் மகா சித்தர். அவருக்கு ஆயிரக்கணக்கான சீடர்கள் உண்டு. தபதி நதிக்கரையில் மடம்ஒன்று கட்டிக்கொண்டு வசித்து வந்தார். தனது சித்தி வல்லமையினால் வானத்தில் பறந்தே சென்று தினமும் பண்டரிநாதனைத் தரிசித்து வருவாராம். ஆனால் இவ்வளவு இருந்தும் மன அமைதி என்றால் என்ன என்பதே அவருக்குத் தெரியவில்லை. ஒரு நாள் இதை நினைத்து ஏங்கிக் கொண்டிருக்கும் போது ஓர் அசரீரி கேட்டது: 'ஆலந்தியிலே ஞானேஸ்வர் என்ற ப்ரம்ம ஞானி இருக்கிறார். அவரை அடைந்து உபதேசம் பெற்றால் உன் எண்ணம் நிறைவு பெறும்''.

இதைக் கேட்டதும் சார்ங்கதேவர் தன் விஷயத்தைப்பற்றி ஓர் ஓலை எழுதினார் ஞானேஸ்வரருக்கு. 'நாமோ பெரியவர்; ஞானேஸ்வரோ சிறு பிள்ளை. ஆனாலும் உபதேசம் பெறவேண்டும். ஓலையில் அவரை எப்படி அழைப்பது? வணக்கம் தெரிவிப்பதா? இல்லை ஆசி கூறுவதா? என்றெல்லாம் சிந்தித்தார். பிறகு ஒன்றும் தோன்றாமல் வெற்று ஓலையையே கொடுத்தனுப்பினார். ஆனால் அந்த வெற்றோலைக்கும் பொருள் கண்டுவிட்டார் ஞானேஸ்வர்! எவ்வளவு கற்றாலும், சித்திகள் பெற்றாலும் வாழ்க்கை வெற்றோலைக்குச் சமமாகிவிட்டது என்று இதை அனுப்பினாரோ என்றார் அந்த ஞானி! பிறகு அதற்குப் பதிலாக 'இறை வழிபாடு ஒன்றே மன அமைதிக்கு மருந்து' என்று ஒரு கவிதையே எழுதி அனுப்பினார். அதைப்படித்துவிட்டு இவரிடம் உபதேசம் பெறப் புறப்பட்டுவிட்டார் சார்ங்கதேவர். ஆனால், குரு சந்நிதிக்குப் போகிறோமே, ஒழுங்காகப் போவோம் என்று நினைக்கவில்லை. அப்பொழுதும் தன் சித்தியைக் காட்டினார்.

ஒரு புலியைச்சிருஷ்டி செய்து அதன் மேல் ஏறிக்கொண்டு ஆலந்திக்குப் புறப்பட்டார். இந்த செய்தி ஊரெல்லாம் பரவிவிட்டது. சித்தர் புலிமேல் வருகிறார் என்று சிலர் பயந்து ஓடத் தொடங்கிவிட்டனர். ஆனால் இதையெல்லாம் கேட்ட குழந்தை முக்தாபாய்க்கு இதை வேடிக்கைப் பார்க்க வேண்டும் போலிருந்தது. அண்ணா ஞானேஸ்வரிடம் சொன்னாள். அவரும், 'ஓ, அதற்கென்ன, பார்த்துவிடுவோம்' என்று கூறி, அருகில் இருந்த ஒரு குட்டிச் சுவரில் நிவ்ருத்தி, ஞானேஸ்வர், சோபான் முக்தா இந்நால்வரும் ஏறிக் கொண்டனர். உடனே ஞானேஸ்வர் நினைத்த மாத்திரத்தில் அந்த குட்டிச் சுவர் பறக்க ஆரம்பித்தது. வானிலே பறந்து கீழே பூமியில் புலியின் மேல் வரும் சார்ங்கதேவரை வேடிக்கை பார்த்தாள் முக்தா!

இதைக் கண்ட சார்ங்கதேவருக்கு கர்வம் குலைந்தது. நாம் ஏதோ சித்தி சித்தி என்ற அகம்பாவத்தில் புதியதாகப் புலியை உண்டுபண்ணி அதில் ஏறி வந்தோம். ஆனால் இந்தச் சிறு

பிள்ளை ஞானேஸ்வரன் ஏற்கெனவே யிருந்த ஒரு குட்டிச் சுவரையே பறக்க வைத்துவிட்டானே! என்று வெட்கித் தலை குனிந்தார். உடனே புலியை விட்டிறங்கி கீழே விழுந்து வணங்கினார். ஊரெல்லாம் சுற்றிக் காண்பித்துவிட்டு ஓரிடத்தில் வந்து இறங்கியது அந்தச்சுவர். அப்படி அன்றைக்கு இறங்கின சுவர், ஆலந்தியில் இன்றைக்கும் அதே இடத்தில் இருக்கிறது. சுமார் பத்துப்பதினைந்து அடி உயரம் இருக்கும் இந்த சுவற்றைச் சுற்றி மேடைபோல் கட்டியிருக்கிறார்கள். மேடைக்குமேல் அரையடிஉயரத்திற்குத்தான் சுவர் நம் கண்களுக்குத் தெரிகிறது. அதன் மேல் நிவ்ருத்தி, ஞானேஸ்வர், சோபான், முக்தா, இவர்கள் ஜம்மென்று உட்கார்ந்திருக்கிறார்கள். பக்கத்திலே நின்று பார்க்கும்போது 'எங்கே திடீரென்று சுவர் பறக்க ஆரம்பித்துவிடுமோ' என்ற ப்ரமை தட்டுகிறது. அவ்வளவு அருமையான தத்ரூபமான காட்சி. மேலே ஏறிச் சென்று தரிசிப்பதற்குப் படிகள் இருக்கின்றன. ஏறி தரிசித்து வலம் வந்து வணங்கி அச்சுவற்றைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொள்ளலாம்.

ஞானேஸ்வர் வாழ்க்கையில் இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு சில ஆண்டுகள் கழிந்தன. ஆனால் இன்னும் ஊரார் எண்ணத்தில் 'இவர்களை ஏற்றுக் கொள்ளக் கூடாது' என்ற எண்ணமே தலை தூக்கி நின்றது. பெரிய இடத்திற்கே இவர்களைக் கொண்டுபோய் மாட்டி வைக்க வேண்டும் என்று, அரசனிடமே சென்று முறையிட்டனர். அவன் இவர்களைத் தன் குருவிடம் அனுப்பி அவரிடமிருந்து "இவர்கள் பகிஷ்கரிக்கத் தகுந்தவர்களல்ல, ஏற்றுக் கொள்ளலாம் என்று அத்தாட்சிப் பெற்று வாருங்கள்" என்று சொன்னான்.

இவர்களும் அங்கே செல்லவும் அந்த குருவும் 'சீ இவர்கள் பிரஷ்டர்கள். இவர்களை ஏற்றுக் கொள்ளக் கூடாது' என்று ஒரே வரியில் கூறிவிட்டார்.

ஞானேஸ்வரருக்குக் கோபம் வந்தது. "என் தந்தை இயற்கையிலேயே பூரண பிரம்ம ஞானி. காசி வாசியான மகானிடம் ஞானோபதேசம் பெற்றுத் துறவியானவர். இருந்தும் குருவின் ஆணைக்காகவே மீண்டும் வீடு திரும்பினார். அப்படிப்பட்ட ப்ரம்ம ஞானி மீண்டும் வந்தால் அவர் பிரஷ்டரா? அவரது குழந்தைகள் பகிஷ்கரிக்கத் தகுந்தவர்களா? வியாசர் போன்ற மஹரிஷிகளெல்லாம் உயர்ந்தவர்கள் என்று போற்றுகிறோமே, அவர்கள் பிறப்பினால் உயர்ந்தவர்களா, செய்யும் கர்மாவினால் உயர்ந்தவர்களா? இதற்குப் பதில் சொல்லும்!' என்றெல்லாம் உண்மையை எடுத்துரைத்து அந்த குருவைத் திணற அடித்துவிட்டார் ஞானேஸ்வர்! அவருக்குக் கோபம். 'உங்களோடு பேசுவதே பாவம். உடனே எழுந்து போங்கள்' என்று கத்தினார் அவர். அந்தச் சமயத்தில் அந்த வழியாக ஒரு எருமை மாடு சென்று கொண்டிருந்தது. அதைப் பார்த்த ஞானேஸ்வர், 'ஆம். உங்களோடு பேசுவதைவிட, இந்த எருமையோடு பேசலாம்! இதற்கு இருக்கும் அறிவில் நூற்றில் ஒரு பங்கு கூட உங்களுக்கு இருக்கிறதோ இல்லையோ" என்றார்.

அந்த குருவினால் இந்த சொல்லைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை. "அந்த எருமைக்கு என்ன அறிவு இருக்கிறது? அது உன்னைப்போல் வாய் திறந்து பேசுமோ?" என்று கேட்டார் ஞானேஸ்வரரிடம். "நம் பிக்கை யிருந்தால் எதுதான் நடக்


*Statement about ownership and other particulars about*

**SAPTHAGIRI**

**(MONTHLY)**

FORM IV

(*See Rule* 8)

| | | | |
|---|---|---|---|
| 1 | Place of publication | ... | TIRUPATI. |
| 2 | Periodicity of its publication | ... | Monthly |
| 3 | Honorary Editor | ... | Sri Ch. Venkatapathi Raju, I.A.S. Executive Officer, T.T.D |
| 4 | Printer's Name | ... | Sri M. Vijayakumar Reddy, L.P.T., |
| | Whether citizen of India | ... | Yes |
| | Address | ... | Manager, T.T.D. Printing Press, Tirupati. |
| 5 | Editor & Publisher's Name | ... | K. Subba Rao, M.A., |
| | Whether citizen of India | ... | Yes |
| | Address | | Editor, Sapthagiri, T.T.D. Journal, Tirupati. |
| 6 | Names and addresses of individuals who own the Newspaper and partners or shareholders holding more than one per cent of the total capital. | ... | Board of Trustees represented by the Executive Officer on behalf of T. T. D., Tirupati. |

*I, K. Subba Rao, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.*

TIRUPATI,
*Date* 28-2-1989.

**(*Sd.*) K. SUBBA RAO,**
*Signature of the Publisher.*

# ஆனாய நாயனார்

அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஆனாய நாயனாரும் ஒருவர். இவர் மதுரைக்குத் தெற்கே காசி-கன்னியாகுமரி தேசிய நெடுஞ் சாலையில் அமைந்துள்ள திருமங்கலமென்னும் திருத்தலத்தில் அவதரித்தார்.

பசுக்கள் மேய்ப்பதைத் தன் தொழிலாகக் கொண்டு வாழ்ந்து வந்தார்.

அவர் பசுக்களை மேய்த்துக்கொண்டே திருக்கொன்றை மரத்தின் இலையினைக் குழலாக அமைத்து அதன்வழி பஞ்சாட்சர மந்திரத்தை வாசிப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தார்.

ஒரு நாள் அவர் பஞ்சாட்சர மந்திரத்தை தன்னையும் மறந்து வாசித்துக் கொண்டிருக்கும்போது பசுக்கள் எல்லாம் மேய்வதை நிறுத்தி இசையில் மயங்கின. புள்ளினங்களும், எல்லா உயிர்களும் தம்தம் வினைகள் மறந்தன. பேரானந்தம் கொண்ட பெருமானும் அவர்முன் தோன்றி என்றும் தன்முன் குழல்வாசிக்கப் பணித்து அருள்செய்து மறைந்தார்.

இதனால் இத்திருத்தலத்து இறைவனுக்கு நடைபெறும் விழாக்களுடன் ஆனாய நாயனாரின் குரு பூஜையும் ஒவ்வொரு வருடமும் கார்த்திகை மாதத்து அத்த நட்சத்திரத்தில் சிறப்பாக நடைபெற்று வருகிறது.

—முடிவை முத்து.

காது'' என்றாராம் ஞானேஸ்வர். "எங்கே பேசச் சொல் பார்க்கலாம்'' என்றார் அந்த குரு. உடனே ஞானேஸ்வர் அந்த எருமையை அருகில் அழைத்து, தன் கையிலிருந்த பாண்டுரங்கனின் புஷ்ப பிரசாதத்தை அதன் தலையில் வைத்து, எருமையை 'மனிதன் பிறப்பினால் பிராம்மணனா; ப்ரம்மத்தை அறியும் பிரம்ம ஞானத்தால் பிராம்மணனா?'' என்று கேட்டார். என்னே அதிசயம்! விலங்கினமாகிய எருமை வாய் திறந்து நான்கு வேதங்களின் சாரத்தையும் பொழிந்து, கடைசியில் "ப்ரம்ம ஞானாந்து ப்ராம்மணஹ'' என்றும் எடுத்துரைத்தது. கூடியிருந்த அந்தணர்கள் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர். ஞானேஸ்வர் உருவத்தில் சிறு பிள்ளையாக இருக்கின்றானே யன்றி ஞானத்தில் ஈஸ்வரன்தான் என்று ஒப்புக்கொண்டு கொண்டாடி வணங்கினர்.

இதன் பிறகு நாமதேவரோடு நட்பு கொண்டு இந்தியா முழுவதும் சுற்றி ஞானயோகம், கர்மயோகம், பக்தி யோகம் இவற்றையெல்லாம் பரவச் செய்தார். கடைசியில் ஆலந்திக்கு வந்து சேர்ந்தார். சிஷ்யர்களையெல்லாம் அழைத்து, 'நான் தியான நிலையில் அமர்ந்துவிடப் போகிறேன்' என் மீது சமாதி கட்டிவிடுங்கள்' என்று கூறினார். முதலில் அவர்கள் இணங்கவில்லையானாலும் பிறகு 'குரு ஆணை' என்று ஒப்புக்கொண்டனர். பிறகு. பட்டினத்தார், சதாசிவ பிரம்மம் போன்ற மஹான்களைப்போல் ஜீவ சமாதியில் அமர்ந்துவிட்டார் ஸ்ரீ ஞானேஸ்வர்.

அந்தச் சமாதிக்கோயில் இன்றும் ஆலந்தியில் விளங்குகிறது. நான்கு பக்கமும் கடைவீதிகள் சூழ மிக அழகானச் சூழ்நிலையில் அமைந்து கண்ணைப்பறிக்கிறது. உள்ளே நுழைந்தாலோ அப்படியே பிரம்மித்துவிடுவோம். அற்புதமான, ராஜ அரண்மனைப்போன்ற கட்டிட அமைப்புகள், வண்ண வண்ண வேலைப்பாடுகள், விஸ்தாரமான பிராகாரங்கள் எல்லாம் கொண்டு பெரிய ராஜ அரண்மனைப் போல் ஜ்வலிக்கிறது அந்த சமாதிக் கோயில். சமாதிக்கு மேலுள்ள நீண்டு உயர்ந்த கோபுரம் கருத்தைக் கவருகிறது. கிழக்கு நோக்கி அமைந்திருக்கிறது சமாதி. ஆன்மீக சாந்தி பரவும் அந்த சமாதி அறையில் தெய்வீக மணம் கமழ்கிறது. ஞானேஸ்வரரே அங்கு இருக்கிறாரோ என்ற உணர்வு ஏற்படுகிறது. சமாதியை கருவறைக்குள்ளேயே வலம் வருவதற்கு நாலு பக்கமும் இரண்டடி அகலத்திற்கு வழியிருக்கிறது. வலம் வந்து சமாதியில் தலைவைத்து வணங்கிக் கொள்ளலாம். அங்குள்ள பண்டாககள், சமாதியிலிருந்த ஒருவித கருப்புப் பொடியை எடுத்து நெற்றியில் இட்டுவிடுகிறார்கள். சமாதி முன் மண்டபத்தில் எங்குப் பார்த்தாலும் சரித்திர நிகழ்ச்சிகளையெல்லாம் சித்திரமாக சுவற்றில் வரைந்து வைத்திருக்கிறார்கள். அதில் சந்நிதிவாயிலுக்கு இருபுறமும் உள்ள இரண்டு பெரிய வண்ணச் சித்திரங்கள் கண்ணையும் கருத்தையும் கவருகின்றன. அதில் ஒன்று ஞானேஸ்வர் குட்டிச் சுவற்றில் பறந்த காட்சி. மற்றொன்று எருமை மாட்டைப் பேசவைக்கும் காட்சி.

இங்கு சமாதிக்கு 'சிறப்பு அபிஷேகம்' செய்கிறார்கள் சில பக்தர்கள். சாதாரண சமயங்களில் சமாதியை மட்டும்தான் தரிசிக்கலாம். இந்த மாதிரி விசேஷ அபிஷேக காலங்களில், மார்பளவுள்ள ஞானேஸ்வர் உருவச் சிலையை அந்தச் சமாதியின் மேல் வைத்து, அலங்காரம் செய்கிறார்கள். தரிசிப்பதற்கு 'நேரே ஞானேஸ்வரே அமர்ந்திருக்கிறாரே' என்று தோன்றும்படியாக இருக்கிறது அந்த அற்புதக் காட்சி.



# பக்தி இலக்கிய ஆய்வு நெறி

பற்பல ஆய்வு நெறிகள் :

ஆய்வு நெறிகள் பல. ஒவ்வொன்றும் தனித்தனிச் சிறப்புடையது; தனித்தனிப் பயன் நோக்கித் தோன்றியது. இவ்வாய்வு நெறிகளை அறிஞர் சோமலெ, 'வளரும் தமிழ்' எனும் தம் நூலில் பின்வரும் பன்னிரு வகைகளாகப் பிரித்துக் காட்டுகிறார். அவை அறிவாராய்ச்சி விளக்கம் (Epistemology) அறிவியல் முறை (Scientific method) செய் முறை (Experimental method), தருக்க முறை (Logical method), அமைப்பு முறை (Systems method) வரலாற்று ஆய்வு முறை (Historical method), விதியுணர் முறை (Normative method), தனி நிலை ஆய்வு முறை(Case Study method), தனி நிலை வரலாறு (Case History), பிறப்பு மரபு முறை (Genetic method), அளந்தறி முறை (Survey method), புள்ளி விவர ஆய்வுமுறை (Statistical method) என்பனவாம். இவ்வாய்வு நெறிகள் ஒன்றுக்கொன்று துணையாகவும் ஒன்றன் முறையையொன்று ஈடு செய்வதாகவும் அமைந்து விளங்குகின்றன.

சிறப்புகள் :

எடுத்துக்காட்டாக, 'அறிவியல் நெறியின் தனிச்சிறப்பு கண்ட முடிவு எல்லாக் காலத்திற்கும் எல்லாச் சுழலுக்கும் எல்லா இடத்திற்கும் ஒத்ததாக அமைதல் ஆகும்.

(எ-டு)

வல்லின மெய்யில் முடியும் சொற்களை யடுத்து உச்சரிப்பில் அந்த வல்லின மெய்யை ஒட்டி ஒரு சிறிய உகரம் குறுகிய உகர ஒலி தோன்றுகின்றது என்பது தொல்காப்பியர் கண்ட ஒலியனியல் உண்மை. இது தமிழோடு அன்றிப் பிறமொழி அமைப்பிலும் இயல்பாக அமைந்திருப்பதைக் காணலாம். எடுத்துக்காட்டாக, Book, Cut, Pot, Watch முதலியனவற்றை அடுத்து ஒலிக்கும் உகர ஒலியைக் கூறலாம்.

அன்று இலக்கிய ஆய்வின் நோக்கு இன்று போல் பரந்துபட்டதாக இல்லை. இலக்கிய கருத்துப் புலப்படுத்துதல், விளக்கம் தருதல், ஒத்த கருத்து ஒத்த உண்மைகளை எடுத்துக் காட்டல், நயம் காண்டல், இலக்கியச் சான்றோரின் சிறப்பைக் கூறல் என்றளவிலேயே பெரும்பாலும் அமைந்து விளங்கிற்று.

அடுத்த நிலையில் இலக்கிய நலம் கூறும்போது இலக்கிய வடிவம், அமைப்பு, இலக்கியப் பொருள், உணர்த்தும் திறன், கற்பனை, சொல்லாட்சி என்பனவாக அது அமைந்திருந்தது.

இதற்கு அடுத்த நிலையில் ஒரு பொருள் பற்றிய இரு பாடல்களை அல்லது இருவர் பாடல்களை, இரு வேறு வடிவில் அமைந்த பாடல்களை, இரு வேறு நாட்டில் தோன்றிய பாடல்களை ஒப்பிட்டு ஆய்ந்தனர்.

அதன் பின்னர், வேறு பல துறை நோக்கில் ஆய்வு தொடர்ந்தது. வரலாறு, மானுடவியல், சமூகவியல், தாவரவியல், விலங்கியல், சோதிடவியல் மருத்துவ இயல் முதலான நோக்குகளில் இலக்கியங்கள் பார்க்கப் பெற்றன; பெறுகின்றன.

தமிழ் மொழியையே பக்தி மொழி என்று ஆய்வியலறிஞர் இனங்காட்டுவதில் ஆர்வங்கொள்கின்றனர். எடுத்துக் காட்டாக 'வணிகத்திற்கு உரியது ஆங்கிலமென்றால், சட்டமொழி இலத்தின் என்றால், இசை. மொழி கிரேக்கமென்றால், தத்துவம் தோய்ந்தது ஜெர்மன் என்றால், தொடர்புக்குரியது பிரெஞ்சு என்றால், பக்திக்கு உகந்தது தமிழ் மொழியே என்று நாம் கூறலாம். தமிழில் உள்ள இந்த அளவு பரப்பிலும் பண்பிலும் பக்தி இலக்கியங்கள் வேறெந்த மொழியிலும் இல்லை' எனத் தனிநாயக அடிகளார் கூறுகின்றார்.


பொன். சௌரிராசன் எம்.ஏ., பி.எச்.டி.

*திருப்பதி.*


ஏறக்குறைய தமிழிலுள்ள அத்துணை யாப்பு வடிவங்களிலும் பக்தி பாடப்பெற்றுள்ளது. பிள்ளைத் தமிழ், மும்மணிக் கோவை, உலா முதலிய சில பிரபந்தங்கள் தோன்ற பக்தி காரணமாகவும் அமைந்துள்ளது. சங்க காலக் காதலும் வீரமும் பக்தி வைராக்கிய பக்திப் பனுவல்களை ஊக்கியுள்ளன.

பக்தி இலக்கிய ஆய்வு நெறி :

முன்பு குறிப்பிட்டது போல ஒவ்வொரு ஆய்வு நெறி ஒவ்வொரு வகையில் பக்தி இலக்கியத்தை ஆய்வதற்குப் பயன்தரக் காணலாம்.

நம்மாழ்வார், மணிவாசகனர் மெய்யுணர்வுத் திறன் ஆயப்புகுந்த ஒருவர் தலைவனும் தன்மையில்தான் பேசுகின்ற பேச்சுக்களின் எண்ணிக்கையைப் புள்ளியியல் ஆய்வு நெறியில் தொகுத்து விளக்கியுள்ளார்.

அறிவியல் நெறியாக, அறிவியல் முறையில் அமைந்துள்ள உற்று நோக்கி மெய்ம்மைகளைச் சேர்த்தல், அவற்றை வகைப்படுத்தல், ஒன்றிற்கும் மற்றொன்றிற்கும் உள்ளதொடர்பினை, மாறுபாட்டினை கண்டறிதல் அவற்றினடிப்படையில் உண்மைகளைக் கண்டறிதல் ஆகியன இலக்கிய ஆய்வுக்கும் பயன்படுவனவே.

இப்படியே அமைப்பு முறையும் வரலாற்று ஆய்வு முறை முதலியனவும் பயன்தரக் காணலாம். எனவே, 'பக்தி இலக்கிய ஆய்வு நெறி' என்று கூறும்பொழுது பக்தி இலக்கியத்துக்கேயெனச் சிறப்பான சில வரையறைகளையே இங்கு நெஞ்சில் கொள்ளுதல் வேண்டும். எப்படிச் சங்க இலக்கிய ஆய்வு நெறி என்று கருதும் போது தொல்காப்பிய அகத்திணை புறத்திணை மரபுகளை எப்படி எப்படி அடிப்படையான மரபுகளாகக் கருதுகின்றோமோ அது போன்று பக்தி இலக்கிய ஆய்வு நெறி ஆய்வில் சில வரையறைகளைக் கொள்ளுதல் வேண்டும்.

சங்க இலக்கியத்திற்குத் தொல்காப்பியம் ஆய்வு நெறி காட்டும் நூலாக அமைந்துவிட்டது. அப்படியொரு ஆய்வு நெறி சுட்டும் ஒரு மரபுநூல் பக்தி இலக்கியத்திற்கு முழு வடிவில் நிறை வடிவில் இன்னும் உருவாகவில்லை.

தமிழ் அகத்திணை இலக்கியங்கள் போல பக்தி இலக்கியங்கள் தமிழுக்கு மட்டுமே உரியனவல்ல என்றாலும், பக்தி இலக்கியம் பாடிய தெய்வத் திருச்சான்றோர் தம் குறிப்புகளைக் கொண்டும் பக்தி இலக்கியம் பற்றித் தோன்றியுள்ளஆய்வுகளை நோக்கியும் சில நெறிமுறைகளை நாம் உருவாக்கலாம். முதலாவதாக எந்தப்பக்தி இலக்கியம் பற்றி ஆய்கிறோமோ அந்தப் இலக்கியம் குறித்துப் பாயிரத்தில், இறை வணக்கத்தில் அவையடக்கத்தில், பதிக முடிவில் அப்பக்தர் என்னென்ன கூறியுள்ளாரோ அஃது அஃதை ஆய்வுச் சிக்கலாக மேற்கொள்ள வேண்டுமென்பதனைப் பக்தி இலக்கிய ஆய்வின் நெறியாகக் கொள்ளலாம்.

தமிழில் அமைந்துள்ள பக்தி இலக்கியங்களெல்லாம் அன்று தொட்டு இன்று வரை தமிழை, தமிழிசையை, தமிழ் யாப்பை, முக்தி நெறியைப் பாராட்டியும் பரப்பியும் வருதல் காணலாம். இதுஒரு பொதுநெறியாக அமைந்துள்ளது.

'தமிழோடு இசைபாட மறந்தறியேன்'
(திருநாவுக்கரசு 4-1-6:1)

'பண்டை தமிழொப்பாய்' (7-29-6:1)

'தமிழ் ஞானசம்மந்தன்
விட்டு சித்தன் விரித்ததமிழ்'
(63-285-422)

'சொல் வழுவிலாத ஒண்டமிழ்கள்'
(3083)

'சங்கத் தமிழ் மாலை' (503)

'கோதை வாய்த்த தமிழ்' (523)

'குலசேகரன் சொல்லின் தமிழ் மாலை'
(667)

'சீரார்ந்த தமிழ் மாலை' (740)

'கலியன் ஒலிசெய் தமிழ் மாலை' (1367)

'சடகோபன் பன்னிய தமிழ் மாலை'
(2863)

'சொல் வழுவாத ஒண்டமிழ்' (3083)

'சொல்லார் தமிழ் ஆயிரம்' (3754)

'உயர்மதில் கூடலின் ஆய்ந்த ஒண்தீந்
தமிழ்'
(திருக்கோவை-20)

என மாணிக்க வாசகனுர் முதலானோர் தமிழின் சிறப்பைத் தம் பக்திப் பாடல்கள் வழி புலப்படுத்தியுள்ளனர்.

'தமிழொடு இசை'யென்றும்

'ஞான சம்மந்தன் சொல்லும் பண்ணி
யல் பாட வல்லார்' (1-4-11)

'பண்ணிடை தமிழொப்பாய்'(7-29-6:1)

எனத் தேவார ஆசிரியர்களும்,

'இன்னிசையால் சொன்ன செஞ்சொல்
மாலை' (1767) (1127)

'நல்லிசை மாலை' (1387)

'சொல் சந்தங்கள் ஆயிரம்' (3769)

'பன்னூர் பாடல் பத்தும்' (1037)

என ஆழ்வார்களும் தம் பக்திப் பாடல்கள் இசை வயப்பட்டன என்ற குறிப்பு நல்கி சென்றுள்ளமையைக் காணலாம். தம் பாடல் பயனைப் பற்றிக் குறிப்பிடுங்கால்,

'பன்னுபாடல் பத்தும் வல்லார்
மெய்த்தவத்தோர் விரும்பும்
மன்னுஞ் சோதியீசனேடே மன்னி
யிருப்பாரே' (1-50-11)

என இவ்வாறு பல இடங்களில் ஞான சம்பந்தரும்,

'நன்னெடுங் காத தன்மையால்
நாவலர் கோனூரன்
பன்னெடுஞ் சொன் மலர் கொண்
டிட்டன பத்தும் வல்லார்
பொன்னுடை விண்ணுலகம் நண்ணு
வார் புண்ணியரே' (7-83-10)

'சீர்மலி செந்தமிழ் வல்லார் தீவினை
யாதுமிலரே' (161)

'செந்தமிழ் பத்தும் வல்லார் திரு
மாலடி சேர்வர்களே' (596)

'நல்லியலின் தமிழ்மாலை பத்தும்
வல்லார்
நலந்திகழ்நா ரணனடிக்கீழ்
நண்ணுவாரே'
(குலசேகரன்-751)

'அன்பின் தன்னை யடைந்தவர்
கட்கெல்லாம்
அன்பன் தென்குரு கூர்நகர் நம்பிக்கு
அன்பனய் மதுரகவி சொன்ன சொல்
நம்புவார் பதி வைகுந்தம்காண்மினே'
(மதுரகவி. கண்ணிநுண்
சிறுதாம்பு-11)

'வரிகொள் வண்டறை பைம்பொழில்
மங்கையர் கலியன தொலி மாலை
அரிய வின்னிசை பாடுநல் லடியவர்க்
கருவினை யடையாவே'
(பெரிய திருமொழி 1-2-10)

"கரவிசும் பெரிவளி நீர்நில மிவைமிசை
வரனவில் திறல்வலி யளிபொறை
யாய்நின்ற
பரனடி மேல்குரு கூர்ச்சடகோபன்
சொல்
நிரனிறை யாயிரத் திவைபத்தும்
வீடே"
(நம்மாழ்வார் 1-1-11)

என ஆழ்வார்களும் தம் பாடல் பயனுக முத்தியைக் குறிப்பிடுவதைக் காணலாம்.

இவ்வாறேசேக்கிழார் பெருமானும்,

'எடுக்கும் மாக்கதை இன்தமிழ்ச்
செய்யுளால்
நடக்கும் மேன்மை நமக்கருள்
செய்திட'

எனப் பாயிரத்திலும்,

'பொங்கிய விருளேயோனே புரையிருள்
போக்குகின்ற
செங்கதிரவன் போல்நீங்கும் திருத்
தொண்டர் புராணம்'
'கூடும் அன்பினில் கும்பிடலே யன்றி
வீடும் வேண்டா விறலின் அன்பினர்'
'வித்தகம் பேச வேண்டா பணிசெய்ய
வேண்டுமென்ருர்'

எனப் பிறவிடங்களிலும் ஆய்வுக்கான குறிப்புகளை வழங்கக் காணலாம்.

அடுத்துச் சான்ருேர் ஒருவர் தம் பக்திப் பாடல் குறித்து அவரைத் தொடர்ந்து வந்த பக்திச் சான்ருேர் இன்னொருவர் தம் பக்திப் பாடல்களில் வெளிப்படையாகவோ மறைமுகமாகவோ குடுப்பிடும் பண்பினை அல்லது பாங்கினை அல்லது பயனை ஆய்வுச் சிக்கலாகக் கொள்ளலாம்.

எடுத்துக் காட்டாக, ஆங்காங்குப் பக்திச் சான்ருேர் ஒருவரை இன்னொருவர் இனங்கண்டு குறித்துச் செல்வது இயல்பாயினும் சைவ சமயச் சான்ருேர் தம் பக்திப் பாடல் திறன் அனைத்தையும் எந்நாட்கண்ணி, அடியார் வணக்கம் (1107-1115) அறிஞர் உரை (1250-1220) ஆகியவற்றில் தொகுத்துக் கூறுகின்ற தாயுமானவர் பாடல்கள் நல்ல காட்டாடும். அவர் குறிப்பிடுகின்ற ஆன்ருேர்க்கு முன்வரும் அடைமொழிகள் எல்லாமே அவ்வவ் ஆன்ருேரை அவர் தம் பாடல்களை நோக்குதற்குரிய குறிப்புகளாகும்.

'வெம்பந்தம் தீர்த்து உலகாள் வேந்
தன் சம்மந்தன்'
'ஏரின்சிவ போகம் இங்கு இவர்க்
கென்ன
உழவாரம் கொள் செய்கையார்'
'பித்தர் இறை என்றிருந்து பேதை
பால் தூதனுப்பும்
வித்த தமிழ்ச் சமர்த்தர்'

என ஆன்ருேர் வாழ்வையும்,

'இருநிலையாய்த் தியாகி என்ற திருப்
பாட்டின்
பெருநிலையைக் கண்டணைந்து பேச்
சுறுவ தெந்நாளோ' (1257)
'என்னுடைய தோழனுமாய்' என்ற
திருப்பாட்டின்
நன்னெறியைக் கண்டுரிமை நாம்
செய்வ தெந்நாளோ' (1260)
'நினைப்பறவே தான்நினைந்தேன்'
என்றநிலை நாடி
அனைத்துமாம் அப்பொருளில் ஆழும்
நாள் எந்நாளோ' (1262)
'சென்று சென்றே அணுவாய்த்
தேய்ந்து தேய்ந் தொன்ருகி'
நின்றுவிடும் என்றநெறி நிற்கும்நாள்
எந்நாளோ' (1263)
'அறிவை அறிவதுவே யாரும் பொருள்
என்றுறுதி
சொன்ன உண்மையினை ஒரும் நாள்
எந்நாளோ' (1270)

என அவர்தம் பாடல் திறத்தையும் தாயுமானவர் சுட்டுகின்ருர்.

இப்படியே சேக்கிழார் அவர்தம் மாக்கதை பற்றி மகாவித்வான் மீனட்சி சுந்தரம்பிள்ளை கூறும் பின்வரும் தொடர்கள்,

'பக்திச் சுவை நனிசொட்டச் சொட்டப்
பாடிய கவி வலவ'
'சகலாகம பண்டித தெய்வச் சைவா'
'சைவப் பயிர் தழையத் தழையும்
புயலே'

ஆகியன ஆய்வுத் தலைப்பாகக் கொள்ளத்தக்கன.

'இன்னிசையால் பாடிக் கொடுத்தாள்'
'வேங்கடவர்க்கென்ற விதியென்ற
விம்மாற்றம்'
'ஆரம்கெடப் பரனன்பர் கொள்ளார்
என்றவர் கட்கே'
'வாரம் கொடு குடப்பாம்பில்
கையிட்டவன்'
'தென்னரங்கம் பாடவல்ல
சீர்ப்பெருமாள்'
'தருச்சந்தப் பொழில் தழுவு தாரணி
யின் துயர்தீர
திருச்சந்த விருத்தம்செய் திருமழி
சைப் பரன் வருமூர்'

எனவரும் திவ்விய பிரபந்த தனியன் தொடர்களும், சிறப்பாகத் திருவாய்மொழி குறித்துப் பின்வரும் தனியன்களும், தொடர்களும்:

'அருமறைகள் அந்தாதி செய்தான்'
'சீரார் சடகோபன் செந்தமிழ்வே
தந்தரிக்கும்'
'வான்திகழும் சோலை மதிளரங்கர்
வான்புகழ் மேல்
ஆன்றதமிழ் மறைகள் ஆயிரமும்-
ஈன்ற
முதல்தாய் சடகோபன், மொய்ம்பால்
வளர்த்த
இதத்தா யிராமானுசன்'

'மிக்க இறைநிலையும் மெய்யாம் உயிர்
நிலையும்
தக்க நெறியும் தடையாகித் தொக்கிய
லும்
ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதும்
குருகையர் கோன்
யாழினிசை வேதத்தியல்'

திவ்விய பிரபந்தத்தை ஆய குறிப்புத் தருவனக அமைந்துள்ளன. இத்தகு பக்திச் சான்ருேர்கள் தமக்கு முன் வாழ்ந்த பக்திச் சான்ருேர்களுடைய பாடல்களைப் பயன்படுத்தியுள்ள பாங்கின் வழி ஆய்வு நெறிகளை உருவாக்கி, அந்நெறிவழி தற்காலப் பக்தி நூல் ஒன்றினையும் ஆராயலாம்.

பக்தி நெறி பற்றிப் பலர் கூறியுள்ளனர். சமயங்களும் சிற்சில பக்தி வகைகளைச் சிறப்பித்து உரைக்கின்றன. பெரும்பாலும் இவற்றுக்குள்ளே பற்பல ஒற்றுமைகள் இருந்தாலும் சிற்சில வேறுபாடுகளும் அமைந்துள. எனவே,

| வரிசை எண் | வகை | சமஸ்கிருதப் பெயர் | பின்பற்றியோர் |
|---|---|---|---|
| 1. | குணநல ஈடுபாடு | குண மகாத்மியா சக்தி பக்தி | நாரதர் |
| 2. | வடிவழகில் ஈடுபாடு | ரூபாசக்தி பக்தி | ஆய்ச்சியர் |
| 3. | நினைப்பற நினைத்தலில் ஈடுபாடு | ஸ்மரணு சக்திபக்தி | பிரகலாதன் |
| 4. | பூசனை செய்தலில் ஈடுபாடு | பூஜா சக்தி பக்தி | சண்டீஸ்வரர் |
| 5. | அடிமைத் திறத்தில் ஈடுபாடு | தாஸ்யா சக்தி பக்தி | அனுமான் |
| 6. | மகவாம் தன்மையில் ஈடுபாடு (தாயாய் அன்பு செய்தல்) | வாத்சல்ய சக்திபக்தி | பெரியாழ்வார் |
| 7. | தோழனும் தன்மையில் ஈடுபாடு | சக்யா சக்தி பக்தி | அர்ச்சுனன் சுந்தரர் |
| 8. | தலைவனும் தன்மையில் ஈடுபாடு | காந்தா சக்தி பக்தி | ஆழ்வார், நாயன்மார் (சிறப்பாகத் திருப்பாவை திருவெம்பாவை) |
| 9. | தலைப்பட்ட பக்திநிலை | ஆத்ம நிவேதனு சக்தி பக்தி | வீடணன் |
| 10. | இறைநிலையில் இருத்தல் | தன்மயாத சக்தி பக்தி | சனற்குமாரர் |
| 11. | பிரிவுத்துயரில் ஈடுபடல் | பரம விரஹா சக்தி பக்தி | ஆய்ச்சியர் |

என்ற நாரதர் பத்திச் சூத்திர அடிப் படையில்,

1. அடியார்பால் அன்பு (மத்பந்த ஜன வாத்சல்யம்)

2. பூசை செய்தலைக் கண்டுகேட்டு அனுபவித்தலில் ஈடுபாடு (பூஜாயாம்ச சாலு மோதனம்)

3. இறைவன் கதை கேட்டலில் ஈடுபாடு (மத்கதா ஸ்ரவணே பக்தி)

4. தழுதழுக்கும் குரல் கேட்டு, நீர்த் ததும்பும் கண்கண்டு ஈடுபடல் (ஸ்வரநேத்ராங்க விக்கிரியா)

5. பூசனை செய்தலில் ஈடுபாடு (ஸ்வ்யமாராதநே யத்நஹ)

6. எளியனுய் வாழ்தலில் ஈடுபாடு (மமார்த்தே டம்ப வர்ஜனம்)

7. நினைப்பற நினைத்தலில் ஈடு பாடு (மமாநுஸ் மரணம் நித்யம்)

8. பயன் எதிர்பாரா வழிபாட்டில் ஈடுபாடு (யச்மாம் நோப ஜீவநி) என்ற பாகவத அடிப்படையிலும்,

1. துன்பம் தவிர்க்க வேண்டல் - அர்த்தித்துவம்,

2. பொருள் வேண்டல் - அர்த் தார்த்தித்துவம்,

3. வீடுபேறு வேண்டல் - ஜிஞ்ஞா சத்துவம்,

4. அருள் நிலையில் நின்று வழி படல் - ஞானத்வம்.

என்ற கீதைஅடிப் படையிலும் ஆய லாம். அப்படியே வைணவம் கூறும் அடியார் பக்தி, அன்பர் பக்தி, தாயாம் தன்மை, தந்தையாம் தன்மை, தலைவியாம் தன்மை ஆகிய ஐவகை பக்தி நெறிகளின் அடிப்படை யில் பக்தி இலக்கியங்களை ஆயலாம்.

இப்படி ஆய்தலை ஒரு நெறியாகக் கொள்ளலாம். இன்னும் பக்தி இலக் கியத்தில் ஒன்பான் சுவை என்பதற்கு மாருக பெருமித பக்தி, உவகை பக்தி, அவல பக்தி, இப்படியும் கூட ஆண் டாள், மணிவாசகர் பாடல்களில் உவகை பத்தி, நாவுக்கரசர் நம்மாழ் வார் பாடல்களில் பெருமித பக்தி இப்படியாகவும் கூட ஆயலாம்.

பக்தி இலக்கிய ஆய்வு நெறி என்று கருதுகின்ற போது 'வித்தகம் பேச வேண்டா' 'ஆய்வுக்கு அகப்படான்' என்ற சான்றோர் வாக்குகளும் நினைக் கத் தக்கன. இறை அனுபவத்தைப் புலப்படுத்தலே பக்திச் சான்றோரின் தலையாய குறிக்கோளாக அமைந்துள் ளது. இந்தக் குறிக்கோளைத் தெளிவு செய்தல் பக்தி இலக்கிய ஆய்வாள னின் கடமையாகும். அவ்வாறு தெளிவு செய்யப் புகுங்கால் அப் பாடல்களைப் பாடிய பக்திச் சான் ரோர் கொண்டிருந்த நம்பிக்கைகளை யும் இவண் மேற்கொள்ளுதல் வேண் டும். பக்தி இலக்கியத்தை அவ்வாறு ஆராய்ந்தால்தான் அதன் பயனைப் பெறல் இயலும்.

பக்தி இலக்கியத்தைப் பக்தி இலக் கியமாக ஆராயாமல் தமிழக வர லாறும் பக்தி இலக்கியமும் என்றிவ் வாறு வெவ்வேறு நோக்கில் ஆய் வார்க்குப் பக்தி இலக்கியம் ஒரு கருவிப் பொருளாகுமேயன்றி அது பக்தி இலக்கிய ஆய்வாக அமையாது.

பக்தி இலக்கியத்தின் (Devotional Literature) என்பது பக்தியைப் பாடு பொருளாக, பாட்டுணர்வாக கொண் டுள்ள இலக்கியம் (Literature of / on Devotion) என்று கருதுதல்வேண் டும். பின்வரும் சில விளக்கள் பக்தி இலக்கியத்திற்குரிய நெறியைத் தெரிந்து பின்பற்றத் துணை செய்யும்.

(33-ம் பக்கம் பார்க்க)

# பார் புகழும்

# இராமாயண் - மஹாபாரத்

திரு. எம. எஸ். பிச்சுமணி - சென்னை.

நமது இந்து சமுதாயத்திற்கு இரண்டு கண்களாகத் திகழ்வது இராமாயணமும், மஹாபாரதமும் ஆகும். ஸ்ரீ ராமனும், ஸ்ரீகிருஷ்ணனும் அவதார புருஷர்கள். நடந்து காட்டியவன் இராமன்; நடப்பித்துக் காட்டியவன் கிருஷ்ணன். பூர்ண அவதாரங்களாக எடுத்துக் காட்டிய இவ்விரு இதிகாசங்களையும் வால்மீகியும்-வியாசரும் எப்படியெல்லாம் வருணித்து விளக்கியுள்ளார்கள் என்பதை, தற்போது நமது நாட்டின் தலைநகரான டெல்லியிலிருந்து வெள்ளி-ஞாயிறுதோறும் ஒளிபரப்பி வரும் தொலைக் காட்சி படம் பிடித்து, பார்க்கும் பலரையும் பரவசமடையச் செய்து வருகிறது.

ஒளிபரப்பப் போகும் நிகழ்ச்சிகளையும். கதைச் சுருக்கங்களையும் பல பத்திரிகைகள் முன்னதாகக் கொடுத்து வருகின்றன. அந்த எண்ணத்தில் நமது 'ஸப்தகிரி' வாசகர்களுக்கு, அவ்விரு கதா பாத்திரங்களின் அம்சங்களையும்-நிகழ்ச்சிகளையும் ஒப்பிட்டுத் தற்போது முழுவதுமாக அளிக்கிறது.

## இராமாயண்

1. இராமாவதாரம் ஏழாவது அவதாரமாகும்.

2. சூரிய வம்சத்தில் இராமன் ஜனனமானான்.

3. 'கௌசல்யா ஜனயத் இராமா' என்ற வால்மீகி முனிவரின் கருத்தின்படி இராம நாமத்தோடு ஸ்ரீராமன் அவதரித்தான்.

4. தசரதர் ஒருவரின் தவத்திற்காக நால்வராக (ஸ்ரீராமன்-லட்சுமணன்-பரதன்-சத்ருக்கனன்) பிறந்தார்கள்.

5. திரேதாயுகத்தில் ஸ்ரீராமாவதாரம் நிகழ்ந்தது.

6. அரண்மனையில் மனுஷ்ய குழந்தையைப் போல ஸ்ரீராமன் அவதரித்தான்.

7. முதலில் கௌசல்யைப் பார்த்தார்.

8. உத்திராயண காலத்தில் இராமன் பிறந்தான்.

9. சுக்கில பட்ச நவமி திதியில் பிறந்தவன் இராமன்.

10. சூரியன் உச்சம் பெற்ற சித்திரை மாதத்தில் ஸ்ரீராமன் இப்பூவுலகில் உதயமானான்.

## மஹாபாரதம்

1. கிருஷ்ணாவதாரம் எட்டாவது அவதாரமாகும்.

2. சந்திர வம்சத்தில் கிருஷ்ணன் ஜனனமானான்.

3. "தமத்புதம் பாலகம் அம்புஜேக்ஷணம்" என்ற பாகவத கருத்தின்படி பாலகனாக ஸ்ரீகிருஷ்ணன் அவதரித்தான்.

4. வசுதேவர், தேவகி, நந்தகோபர், யசோதை ஆக நால்வரின் தவத்திற்காக பகவான் கிருஷ்ணன் பிறந்தான்.

5. துவாபரயுகத்தில் ஸ்ரீ கிருஷ்ணாவதாரம் நிகழ்ந்தது.

6. சிறையில் சங்கு-சக்கரப் பட்டு பீதாம்பரத்துடன் தெய்வாம்சமாக ஸ்ரீகிருஷ்ணன் அவதரித்தான்.

7. முதலில் வசுதேவர் பார்த்தார்.

8. தக்ஷிணாயண காலத்தில் கிருஷ்ணன் பிறந்தான்.

9. கிருஷ்ண பட்ச அஷ்டமி திதியில் பிறந்தவன் கண்ணன்.

10. சூரியன் ஆட்சி பெற்ற ஆவணி மாதத்தில் ஸ்ரீகிருஷ்ணன் இப்பூவுலகில் உதயமானான்.

11. சந்திரன் ஆட்சி பெற்ற கடக இராசியில் ஸ்ரீராம ஜனனம் நிகழ்ந்தது.

12. மன்மதனைப் போல் அழகுள்ள குழந்தையாக இராமபிரான் ஜனனமானார்.

13. குரு உச்சம் பெற்று, லக்னம், சந்திரன் ஒரே ராசியில் சஞ்சரிக்கும் காலத்தில் இராமாவதாரம் நிகழ்கிறது.

14. சுக்கிரன் உச்சம் பெற்று பிறந்தார்.

15. ஸ்ரீராமன் ஜனன காலத்தில் குரு மகா திசை ஆரம்பம்.

16. ஸ்ரீராமன் நல்ல வெய்யிலில் நடுப்பகலில் பிறந்தான்.

17. ஸ்ரீராமாவதார காலத்தில் ஒரு கிரஹம் ஆட்சி பெற்றும், ஐந்து கிரஹம் உச்சம் பெற்றும், சஞ்சாரம் செய்தார்கள்.

18. சுக்கிரனுடைய வீட்டில் புதன் சஞ்சரிக்கும் காலத்தில் ஸ்ரீராமர் ஜனனம் நிகழ்ந்தது.

19. ஸ்ரீராமர் ஜனன கால ஜாதகத்தில் லக்ன முதல் ஏழு ராசிக்குள்-ஏழு கிரஹங்கள் இடமாக சஞ்சரித்தார்கள்.

20. ஸ்ரீராமனை எழுப்ப 'சுப்ரபாதம்' இசைக்கப்பட்டது.

21. ஸ்ரீராமன் சத்ருக்களைக் கொல்ல கல்வி மற்றும் வில் வித்தைகளை முதலில் பயின்றார்.

22. சத்யம் தர்மம் ஆகியவைகளை நடத்திக் காண்பித்தவர் இராமர்.

23. ஸ்ரீராமன் எப்போதும் வில்லை (வில்-அம்பு) கையில் ஏந்தியிருப்பான்.

24. சத்ருக்களின் சம்ஹாரத்திற்காக ஸ்ரீராமாவதாரம் நிகழ்ந்தது.

25. ஸ்ரீராமன் 'பித்ருவாக்ய' பரிபாலனம் செய்தார்.

26. ஸ்ரீராமன் தன்னுடைய முதல் வதமாக 'தாடகை' என்ற பெண்ணையே தேர்ந்தெடுத்தார்.

27. இராமன் ஏகபத்னி விரதன்.

28. இராமன் தன் மனைவியைத் தேடிக்கொண்டு அலைந்தார்.

29. ஸ்ரீ ராமபிரான் சத்ருக்களைத் தேடிக் கொண்டு போய் வதம் செய்தார்.

30. இராமாயணம் நிகழ "கூனி" என்ற பெண்ணே காரணமாக இருந்தாள்.

11. சந்திரன் உச்சம் பெற்ற ரிஷப ராசியில் ஸ்ரீகிருஷ்ண ஜனனம் நிகழ்ந்தது.

12. மன்மதனுக்கும் மேலான அழகுடன் கண்ணபிரான் ஜனனமானார்.

13. சந்திரன் உச்சம் பெற்று லக்னம், குரு ஒரே ராசியில் சஞ்சரிக்கும் காலத்தில் கிருஷ்ணாவதாரம் நிகழ்கிறது.

14. சுக்கிரன் நீசம் பெற்றுப் பிறந்தார்.

15. ஸ்ரீ கிருஷ்ணன் ஜனன காலத்தில் சந்திர மகாதிசை ஆரம்பம்.

16. ஸ்ரீ கிருஷ்ணன் நல்ல மழையில் நடு நிசியில் பிறந்தான்.

17. ஸ்ரீ கிருஷ்ணாவதார காலத்தில் இரண்டு கிரஹம் ஆட்சி பெற்றும், மூன்று கிரஹம் உச்சம் பெற்றும் சஞ்சாரம் செய்தார்கள்.

18. புதனுடைய வீட்டில் சுக்கிரன் சஞ்சரிக்கும் காலத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் ஜனனம் நிகழ்ந்தது.

19. ஸ்ரீ கிருஷ்ணன் ஜனன கால ஜாதகத்தில் லக்ன முதல் ஏழு ராசிக்குள் ஏழு கிரஹங்கள் வலமாக சஞ்சரித்தார்கள்.

20. கண்ணனை எழுப்ப கன்றுக்குட்டிச் சப்தமும், தயிர்க் கடையும் சத்தமும்தான் கேட்டது.

21. ஸ்ரீகிருஷ்ணன் சத்ருக்களைக் கொன்ற பிறகு சாந்தீபணி மகரிஷியிடம் சென்று கல்வி கற்றார்.

22. சத்யம், தர்மம் ஆகியவைகளைச் சொல்லிக் காண்பித்தவர் கிருஷ்ணர்.

23. ஸ்ரீ கிருஷ்ணர் எப்போதும் கோலை (கம்பு) கையில் வைத்துக் கொண்டிருப்பான்.

24. பக்தர்களின் சிஷ்ட பரிபாலனத்திற்காக ஸ்ரீ கிருஷ்ணாவதாரம் நிகழ்ந்தது.

25. ஸ்ரீ கிருஷ்ணன் 'மாத்ருவாக்ய' பரிபாலனம் செய்தார்.

26. ஸ்ரீ கிருஷ்ணன் தன்னுடைய முதல் வதமாக 'பூதகி' என்ற பெண்ணையே தேர்ந்தெடுத்தார்.

27. கண்ணன் எப்போதும் பெண்கள் கூட்டத்தில்தான்.

28. கண்ணனைத் தேடிக் கொண்டு கோபியர்கள் அலைந்தார்கள்.

29. ஸ்ரீ கிருஷ்ணனைத் தேடி வந்து சத்ருக்கள் நாசமடைந்தார்கள்.

30. மஹாபாரதம் நிகழ 'சகுனி' என்ற ஆணே காரணமாக இருந்தான்.

31. ஸ்ரீ ராமவதார காலத்தில் ஸ்ரீ ராமபிரான் கானகத்தில் வெய்யில் மழை என்று பாராது அலைந்து கொண்டு உஷ்ணமான திருமேனியைப் பெற்றார்.

32. ஸ்ரீராமன் கானகம் செல்லும் காலத்தில் எல்லோரது முன்னிலையிலும் சீதாப்பிராட்டியாருக்கு 'மரவுரி' கொடுத்தார்.

33. இராமபிரானைக் 'காட்டுக்கு' அழைத்துப் போனவர் சுமந்திரர்.

34. இராமபிரானைக் காட்டில் கொண்டு விட்ட குதிரைகள் கண்களில் நீர் பெருக அழுதன.

35. இராமனுக்கு மரக்கிளையில் ஏறித்தாவும் குரங்குகளின் சிநேகிதம் கிடைத்தது.

36. ஸ்ரீராமன் 'ஆஞ்சநேயரை' நம்பித்தான் தன் மனைவியிடம் 'தூது' அனுப்பினான்.

37. இராமன் 'தண்டகாவனம்' செல்ல 'கங்கை' நதியைக் கடந்து சென்றார்.

38. இராமாயண கதையில் 'இராமனுக்காக' அனுமார் தூது சென்றார்.

39. இராமாயண கதையில் வில்லனாக சித்தரிக்கப்பட்ட இராவணனுக்கு அனுமான், அங்கதன், விபீஷணன், கும்பகர்ணன் ஆகிய நால்வரும் புத்தி மதிகளைச் சொல்லி சரணாகதியடையச் சொன்னார்கள்.

40. 'மந்தாரை சபதம்' இராமாயண காவியத்தில் மிக முக்கியமான நிகழ்ச்சியாகும்.

41. சூரிய புத்திரன் சுக்ரீவன். இவனைத் தனது நண்பனாக்கிக் கொண்டு-இந்திரனுடைய பிள்ளையான 'வாலியை' சூரிய புத்திரனான சுக்கிரவனைக் கொண்டே ஸ்ரீராமபிரான் அழிக்கச் செய்தார். வாலி-சுக்ரீவன் சகோதரர்கள் என்பது முக்கியம்.

42. யுத்த காலத்தில்தான் 'ஆதித்யஹ்ருதயம்' இராமனுக்காக அகத்தியரால் உபதேசிக்கப்பட்டது.

43. இராம-இராவணப்போர் 7 நாட்கள் நடந்தது.

44. தன் மனைவி 'சீதையை'ச் சிறை வைத்த இராவணனை இராமன் கொன்றான்.

45. ஸ்ரீராமபிரான் இராவணனைக் கொன்று விட்டார் என்ற செய்தியைச் சொன்ன அனுமாரைப் பார்த்து சீதை நமஸ்காரம் செய்தாள்.

31. ஸ்ரீ கிருஷ்ணாவதார காலத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் வீடு, வீடாகச் சென்று, வெண்ணை-பால் தயிர் என்று வயிறு புடைக்கத் தின்றுவிட்டுக் குளிர்ந்த திருமேனியைப் பெற்றார்.

32. ஸ்ரீ கிருஷ்ணன் மறைந்திருந்து, திரௌபதிக்கு வஸ்திராபணமாக புடவையைக் கட்டிக் கொள்ளும் பொருட்டுக் கொடுத்தார்.

33. கண்ணபிரானை 'நாட்டுக்கு' அழைத்து வந்தவர் அக்ரூவர்.

34. சாரதியாக அமர்ந்து சேவகம் செய்த கண்ணபிரான் குதிரையைத் தடவிக் கொடுத்து ஆனந்தக் கண்ணீர் விட்டார்.

35. கண்ணபிரானே 'மரம் ஏறி' கோபியர்களின் புடவைகளை எடுத்துக் கொண்டான்.

36. ஸ்ரீ கிருஷ்ணனே 'உத்தவரை' நம்பித்தான் கோபியர்களிடம் 'தூது' அனுப்பினான்.

37. கண்ணன் 'பிருந்தாவனம்' செல்ல 'யமுனை' நதியைக் கடந்து சென்றார்.

38. மஹாபாரதக் கதையில் 'பாண்டவர்களுக்காக' கண்ணனே தூது சென்றார்.

39. மகாபாரதக் கதையில் வில்லனாகச் சித்தரிக்கப்பட்ட துரியோதனனுக்கு, கிருஷ்ணன், பீஷ்மன், துரோணன், கிருபன் ஆகிய நால்வரும் புத்திமதிகள் சொல்லி ஒற்றுமையாக இருக்கச் சொன்னார்கள்.

40. 'பாஞ்சாலி சபதம்' மகாபாரத காவியத்தில் மிக முக்கியமான நிகழ்ச்சியாகும்.

41. இந்திரனுடைய பிள்ளை அர்ஜுனன். இவனைத் தனது நண்பனாக்கிக் கொண்டு, சூரிய புத்திரரான கர்ணனை-அர்ஜுனனைக் கொண்டே ஸ்ரீ கண்ணபிரான் அழிக்கச் செய்தார். (கர்ணன் அர்ஜுனன் சகோதரர்கள் என்பது முக்கியமான தொன்றாகும்.)

42. யுத்த காலத்தில்தான் 'பகவத் கீதை' அர்ஜுனனுக்காக கிருஷ்ணரால் உபதேசிக்கப்பட்டது.

43. பாரதப்போர் 18 நாட்கள் நடந்தது.

44. தன்பெற்றோர்களை 'சிறைவைத்த' கம்சனைக் கண்ணன் கொன்றான்.

45. ஸ்ரீ கண்ணபிரான் வந்துவிட்டார் என்று ஒரு பிராமணன் சொன்ன செய்தியைக் கேட்ட பிறகு அந்த பிராமணனைப் பார்த்து ருக்மணி நமஸ்கரித்தாள்.

31. ஸ்ரீ ராமவதார காலத்தில் ஸ்ரீ ராமபிரான் கானகத்தில் வெய்யில் மழை என்று பாராது அலைந்து கொண்டு உஷ்ணமான திருமேனியைப் பெற்றார்.

31. ஸ்ரீ கிருஷ்ணவதார காலத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் வீடு, வீடாகச் சென்று, வெண்ணை-பால் தயிர் என்று வயிறு புடைக்கத் தின்றுவிட்டுக் குளிர்ந்த திருமேனியைப் பெற்றார்.

32. ஸ்ரீராமன் கானகம் செல்லும் காலத்தில் எல்லோரது முன்னிலையிலும் சீதாப்பிராட்டியாருக்கு 'மரவுரி' கொடுத்தார்.

32. ஸ்ரீ கிருஷ்ணன் மறைந்திருந்து, திரௌபதிக்கு வஸ்திராபணமாக புடவையைக் கட்டிக் கொள்ளும் பொருட்டுக் கொடுத்தார்.

33. இராமபிரானைக் 'காட்டுக்கு' அழைத்துப் போனவர் சுமந்திரர்.

33. கண்ணபிரானை 'நாட்டுக்கு' அழைத்து வந்தவர் அக்ரூவர்.

34. இராமபிரானைக் காட்டில் கொண்டு விட்ட குதிரைகள் கண்களில் நீர் பெருக அழுதன.

34. சாரதியாக அமர்ந்து சேவகம் செய்த கண்ணபிரான் குதிரையைத் தடவிக் கொடுத்து ஆனந்தக் கண்ணீர் விட்டார்.

35. இராமனுக்கு மரக்கிளையில் ஏறித்தாவும் குரங்குகளின் சிநேகிதம் கிடைத்தது.

35. கண்ணபிரானே 'மரம் ஏறி' கோபியர்களின் புடவைகளை எடுத்துக் கொண்டான்.

36. ஸ்ரீராமன் 'ஆஞ்சநேயரை' நம்பித்தான் தன் மனைவியிடம் 'தூது' அனுப்பினான்.

36. ஸ்ரீ கிருஷ்ணனே 'உத்தவரை' நம்பித்தான் கோபியர்களிடம் 'தூது' அனுப்பினான்.

37. இராமன் 'தண்டகாவனம்' செல்ல 'கங்கை' நதியைக் கடந்து சென்றார்.

37. கண்ணன் 'பிருந்தாவனம்' செல்ல 'யமுனை' நதியைக் கடந்து சென்றார்.

38. இராமாயண கதையில் 'இராமனுக்காக' அனுமார் தூது சென்றார்.

38. மஹாபாரதக் கதையில் 'பாண்டவர்களுக்காக' கண்ணனே தூது சென்றார்.

39. இராமாயண கதையில் வில்லனாக சித்தரிக்கப்பட்ட இராவணனுக்கு அனுமான், அங்கதன், விபீஷணன், கும்பகர்ணன் ஆகிய நால்வரும் புத்திமதிகளைச் சொல்லி சரணாகதியடையச் சொன்னார்கள்.

39. மகாபாரதக் கதையில் வில்லனாகச் சித்தரிக்கப்பட்ட துரியோதனனுக்கு, கிருஷ்ணன், பீஷ்மன், துரோணன், கிருபன் ஆகிய நால்வரும் புத்திமதிகள் சொல்லி ஒற்றுமையாக இருக்கச் சொன்னார்கள்.

40. 'மந்தாரை சபதம்' இராமாயண காவியத்தில் மிக முக்கியமான நிகழ்ச்சியாகும்.

40. 'பாஞ்சாலி சபதம்' மகாபாரத காவியத்தில் மிக முக்கியமான நிகழ்ச்சியாகும்.

41. சூரிய புத்திரன் சுக்ரீவன். இவனைத் தனது நண்பனாக்கிக் கொண்டு-இந்திரனுடைய பிள்ளையான 'வாலியை' சூரிய புத்திரனான சுக்கிரவனைக் கொண்டே ஸ்ரீராமபிரான் அழிக்கச் செய்தார். வாலி-சுக்ரீவன் சகோதரர்கள் என்பது முக்கியம்.

41. இந்திரனுடைய பிள்ளை அர்ஜுனன். இவனைத் தனது நண்பனாக்கிக் கொண்டு, சூரிய புத்திரரான கர்ணனை-அர்ஜுனனைக் கொண்டே ஸ்ரீ கண்ணபிரான் அழிக்கச் செய்தார். (கர்ணன் அர்ஜுனன் சகோதரர்கள் என்பது முக்கியமான தொன்றாகும்.)

42. யுத்த காலத்தில்தான் 'ஆதித்யஹ்ருதயம்' இராமனுக்காக அகத்தியரால் உபதேசிக்கப்பட்டது.

42. யுத்த காலத்தில்தான் 'பகவத் கீதை' அர்ஜுனனுக்காக கிருஷ்ணரால் உபதேசிக்கப்பட்டது.

43. இராம-இராவணப்போர் 7 நாட்கள் நடந்தது.

43. பாரதப்போர் 18 நாட்கள் நடந்தது.

44. தன் மனைவி 'சீதையை'ச் சிறை வைத்த இராவணனை இராமன் கொன்றான்.

44. தன்பெற்றோர்களை 'சிறைவைத்த' கம்சனைக் கண்ணன் கொன்றான்.

45. ஸ்ரீராமபிரான் இராவணனைக் கொன்று விட்டார் என்ற செய்தியைச் சொன்ன அனுமாரைப் பார்த்து சீதை நமஸ்காரம் செய்தாள்.

45. ஸ்ரீ கண்ணபிரான் வந்துவிட்டார் என்று ஒரு பிராமணன் சொன்ன செய்தியைக் கேட்ட பிறகு அந்த பிராமணனைப் பார்த்து ருக்மணி நமஸ்கரித்தாள்.

46. ஜாம்பவான் என்ற கரடி ஸ்ரீராமபிரானுக்கு மிகவும் பிடித்த நண்பன். இவனது உதவி இராமனுக்கு இருந்தது.

47. சேதுக்கரையில் பாலம் கட்டும் சமயம் ஒரு அணில் இராமனுக்கு உதவியது. இது இராம-இராவண யுத்தம் ஆரம்பிக்கும் முன்பு நடந்த நிகழ்ச்சியாகும்.

48. ஸ்ரீராம பக்தனை ஆஞ்சநேயர் அன்றும்-இன்றும்-என்றும் இருந்து வருகிறார்.

49. ஸ்ரீராமனுக்கு 'லவன்' என்ற மூத்த பிள்ளை உண்டு.

50. ஸ்ரீராமன் சரயூ நதியில் இறங்கி வைகுண்டம் போய் சேர்ந்தார்.

51. இராமன் தர்ம யுத்தத்தைச் செய்தான். ஒரு சமயம் இராவணன் போரில் ஈடுபட்ட காலத்தில் மிகவும் தளர்ந்து போய்விட்டான். ஆகவே 'இன்று போய் நாளை வா' என்று சொல்லிப் போரை நிறுத்தினார்.

52. ஸ்ரீராமபிரான் 7ஆது திருநட்சத்திரத்தில் பிறந்தான். இராம காதையை 7 ரிஷிகள் சேர்ந்து சப்தரிஷி இராமாயணமாக செய்துள்ளார்கள். தன் வலிமையைக் காட்டிக் கொள்ள 7 மரத்தை ஒரே பாணத்தில் துளை போட்டுக் காண்பித்தான். இராமாயணம் 7 காண்டத்துடன் கூடியதாகும். ஏழின் பெருமையை இராமாயண காவியத்தில் காணலாம்.

46. ஜாம்பவான் என்ற கரடியின் புதல்வியா[illegible] ஜாம்பவதியை ஸ்ரீ கிருஷ்ணன் மிகவும் நேசித்து, திருமணமும் செய்து கொள்கிறார்.

47. யுதிஷ்டிரன் அசுவமேத யாகம் செய்யு[illegible] சமயம் ஒரு கீரிப்பிள்ளை, தர்மத்தைப்பற்றி உபதேச செய்தது. இந்த நிகழ்ச்சியானது பாரதப் போ[illegible] நடந்து முடிந்த பின்னர்தான் நடந்தது.

48. ஸ்ரீ கண்ணபிரான் அருளிய 'கீதை' கால[illegible] தில் ஆஞ்சநேயர் சாட்சியாக இருந்து இன்றும் தே[illegible] கொடியில் அமர்ந்து காட்சியளிக்கின்றார்.

49. ஸ்ரீ கிருஷ்ணனுக்கு 'பிரத்யும்மனன்' என்[illegible] பிள்ளை உண்டு.

50. ஸ்ரீ கண்ணன் மரத்தின்மேல் அமர்ந்திருந்[illegible] போது ஒரு வேடனால் அம்பு எறியப்பட்டு அத[illegible] பயனாக வைகுண்டம் போய்ச் சேர்ந்தார்.

51. கண்ணன் யுத்த களத்தில் செய்தது? ஒ[illegible] சமயம் கர்ணனின் தேர் பூமியில் அகப்பட்டுவிட்டது அப்போது அவன் மிகவும் தளர்ந்துவிட்டான். அ[illegible] சமயம் பார்த்துக் கர்ணனைக்கொல்ல கண்ண[illegible] உத்திரவிட்டான்.

52. மகாபாரதம் 18 அங்கங்களைக் கொண்டது பாரதப் போரில் 18 ஆயிரம் அட்சௌன்ய சேனைக[illegible] கலந்து கொண்டன. 18 ஆயிரம் சுலோகங்களுடன் கூடிய ஒரு பெரிய தொகுப்புதான் மகாபாரதம் பகவத் கீதை 18 யோகங்களைக் கொண்டதாகும் 1[illegible] நாட்கள் பாரதப்போர் நடந்தது. பதினெட்டின் பெருமை பாரதத்தில் காணலாம்.



## சுபகாரியங்களுக்குக் கூடாமாதங்கள்

ஆடியில் இராவணன் மாண்டதும்,
மார்கழியில் பாரதப்போர் மூண்டதும்,
புரட்டாசியில் இரணியன் இறந்ததும்,
மாசியில் ஈசன் நஞ்சு அருந்தியதும்,
பங்குனியில் காமன் வெந்ததாலே.

ஆதலின் ஆடி, புரட்டாசி, மார்கழி,
மாசி, பங்குனி ஆகிய ஐந்து
மாதங்கள் சுப காரியங்கள்
செய்ய ஏற்றதல்ல.

—கமலவேணி தனபதி.

## திருமாலின் சயனங்கள்

திருவில்லிபுத்தூரில் வடபத்ரசயனம்
திருஇந்தளூரில் வீரசயனம்
திருக்கடல்மல்லையில் தலசயனம்
திருக்குடந்தையில் உத்தானசயனம்
திருப்புல்லாணியில் தர்ப்பசயனம்
திருவரங்கத்தில் புஜங்கசயனம்
திருச்சித்ரகூடத்தில் போகசயனம்
திருநீர்மலையில் மாணிக்கசயனம்.

வி. ஸ்ரீதர்-கோவை.

# ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் திருக்கோயில்



மதுரை கிழக்கு ராஜகோபுரம்

வி. முத்துராமன் - கோவை.

தீண்ணார் தமிழளிக்கும் தண் பாண்டி நாட்டில் பாடல் பெற்ற பதிகள் பதினான்கு. அவற்றுள் தலை சிறந்து விளங்குவது மதுரைப் பெருநகர். குறைந்தது இரண்டாயிரம் ஆண்டுகளாகப் பேரும் புகழும், பெருமையும் கொண்டு திகழும் தென்னிந்திய நகரம் இது ஒன்றே என்று சொன்னால் அது மிகையாகாது.

மதுரை மூதூரைப் பற்றி வேற்று நாட்டினர் கூறியிருப்பவற்றை நோக்கின் இதன் பழம் பெருமை புலனாகிறது. கிரேக்க ரோமர்களுக்கு இந்நகர் நன்கு தெரிந்து இருந்தது. மகாவம்சம் என்ற நூல் இலங்கையின் முதல் மன்னனான விஜயன் (கி.மு.500) மதுரைப் பாண்டிய மன்னன் மகளை மணந்தான் என்று கூறுகிறது. பாடலிபுரத்திலிருந்து அரசாண்ட சந்திரகுப்த மௌரியன் (கி. மு. 302) அவையில் கிரேக்க தூதுவனாக இருந்த 'மெகாஸ்தனிஸ்' மதுரையில் பாண்டிய அரசி அரசாண்டதாகத் தன் குறிப்பேட்டில் குறிப்பிடுகிறார்.

மதுரை என்றால் 'இனிமை' என்று பொருள்படும். இன்றும் மேனாட்டுப் பயணிகள் 'Sweet Land' என்றே கூறுகிறார்கள். தனஞ்சயன் என்ற வணிகன் வாணிபம் செய்துவிட்டுத் திரும்புங்கால், கடம்பவனமாகக் கிடந்த இப்பகுதியில் இளப்பாறிக் கொண்டிருந்தபோது ஒரு சிவலிங்கத்தையும் அதனருகில் நீர்ப்பொய்கையொன்றையும் கண்டான். உடனே தன் நாட்டு அரசன் குலசேகர பாண்டியனிடம் விரிவாக எடுத்துச் சொன்னான். இதைக் கேட்ட பாண்டியன் அவ்விடத்தில் குளத்தைச் சுற்றி ஒரு கோயில் கட்டினான். மரங்களை வெட்டிக் காடுகெடுத்து மதில், அகழி ஆகியவற்றோடு கூடிய பெரிய நகரை அதைச் சுற்றி நிர்மாணம் செய்தான். சிவபெருமான் தமது சடை முடிமேல் பிறையிடத்துள்ள மதுவைத் தெளித்து அவ்வூரைப் புனிதமாக்கினார். அதன் பொருட்டு 'மதுரை' என்று பெயர் பெற்றது இவ்வூர்.

வம்சசேகர பாண்டியன் காலத்தில் ஊரில் நெருக்கம் ஏற்பட்டது. இந்நகரத்தின் ஆதி எல்லையைக் காட்டியருளுமாறு சிவபெருமானை வேண்டினான் மன்னன். தனது திருக்கையில் கங்கணமாயிருந்த பாம்பை எல்லை அளந்து காட்டுமாறு பணித்தார் இறைவன். அது வாயும் வாலும் ஒன்று

சுசீலா பிள்ளை
தஞ்சாவூர்.
(படமும் கட்டுரையும்)

படும்படி வட்டமாக வளைந்து எல்லையைக் குறித்தது. அதன் பொருட்டு 'ஆலவாய்' என்ற பெயரும் நகருக்கு ஏற்பட்டது.

'பெருநீர் வையை வளநீர்க்கூடல் உடல் உயிர்' என்று சொக்கலிங்கப் பெருமான் உயிராகவும், மதுரையை அப்பெருமானுகிய உயிர் உறையும் உடலாகவும் உருவகித்தார் ஒரு புலவர். 'தமிழொடு பிறந்து பழமதுரையில் வளர்ந்த கொடி' என்று மீனுட்சியம்மையைப் போற்றுகிருர் மற்ருெரு புலவர். உமாதேவியார் தடாதகைப் பிராட்டியாகவும், சிவபெருமான் சோமசுந்தரப் பாண்டியனுகவும், முருகக் கடவுள் உக்கிரப் பெருவழுதியாகவும் மதுரையிலே அவதரித்தனர் என்பர் குமரகுருபர சுவாமிகள்.

சிவ பூஜையின் மேன்மையை மக்களுக்கு அறிவுறுத்தச் சிவபெருமான் தம்மைத் தாமே இத்தலத்தில் பூஜித்ததாக ஐதீகம். 'இம்மையே நன்மை தருவார்' என்ற திருநாமத்தோடு அவர் ஊரில் எழுந்தருளியிருக்கிருர். இவர் பெயராலே ஒரு பெரிய தெருவும் இருக்கிறது.

'தேனுரைத் தமிழும் திருவுரை கூடலும்' என்று தமிழுடன் மதுரையைச் சேர்த்துப் பேசுகிருர் கல்லாடனுர் என்ற புலவர். தமிழ் மகள் பாண்டியரது புகழாகிய தொட்டிலிலே ஆடி, சங்கப் பலகையிலே வீற்றிருந்து புலவர்களால் வளர்க்கப்பட்டாள் என்கிருர் வில்லிப்புத்தூராரின் புதல்வர் வரந்தருவார். கண்ணுதற் கடவுள் சங்கப்புலவரோடு இருந்து தமிழை ஆய்ந்த ஞானபூமி மதுரை.

'கொங்குதேர் வாழ்க்கை' என்ற சங்கத் தமிழ் அவர் வாயிலே மலர்ந்த அருட்சோலை. பாண்டிய மன்னர்கள் தமிழ்ச் சங்கம் வைத்து வளர்த்த மாநகர் இது. திருஞான சம்பந்தருடைய பாடல்கள் வைகை வெள்ளத்தை எதிர்த்து நீந்திச் சென்று தமிழ் மறையின் பெருமையை மக்களுக்கு உணர்த்திய ஊர் ஆலவாய்.



கோயிலின் உட்தோற்றம்

வி. முத்துராமன் - கோவை.

தவிர, நான்கு மேகங்கள் மாடங்களாக நின்று பெரு மழையைத் தடுத்ததால் 'நான் மாடக்கூடல்' என்றும், கடம்ப மரங்கள் நிறைந்த காடாக இருந்தமையின் 'கடம்பவனம்' என்றும், வசிக்க முத்தி தரும் பதியானபடியால் 'ஜீவன் முத்திபுரம்' எனவும், தடாதகைப் பிராட்டியார் கன்னியாயிருந்து அரசாண்டதால் 'கன்னிபுரீசம்' என்றும் வழங்கப் படுகிறது.

தவிர, வர குணப்பாண்டியனுக்குச் சிவலோகம் காட்டியதால் 'சிவலோகம்' என்றும், இறைவன், தேவி, முருகன் இவர்கள் பாண்டிய குலத்தில் தோன்றி அரசு செய்தமையால் 'சிவநகரம்' என்றும், ஆன்மாக்களுக்கு சரியை முதலிய நான்கையும் தருதலால் சமஷ்டி 'விச்சாபுரம்' என்றும் ஆறு ஆதார ஸ்தானங்களுக்கெல்லாம் அதீதமாயுள்ளதான 'துவாத சாந்தம்' எனப்படும் 'ஆலாசிய க்ஷேத்திரம்' என்றும் சொல்லப்படுகிறது.

புலவர்கள் கூடித் தமிழ் ஆராய்ந்த இடமாதலின் 'கூடல்' என்று பேர் வந்ததென்றும் கூறுவர். மதுரை மாநகர் தென் இந்திய ஆதென்ஸ் (The south Indian Athens) என்றும் புகழ்ந்து கூறப்படுகிறது.

இதிகாச-இலக்கிய நூல்களிலே :

மதுரையைப் பற்றிப் பண்டு தொட்டு இன்றுவரை கூறும் நூல்



பொற்றாமரைக்குளம்.

கள் பலப்பல! பரிபாடலில், ஆறு பாடல்களில் மதுரையின் மாண்பு கூறப்படுகிறது. ஒரு பாட்டில், மதுரையை ஒரு தராசுத் தட்டில் வைத்துமற்றென்றில்உலகப்பொருள் கள் அனைத்தும் வைக்க, மதுரையை யிட்டத் தட்டுத் தாழ்ந்தது என்று கூறப்பட்டிருக்கிறது. மதுரை திரு மாலின் கொப்பூழில் பூத்த தாமரை. அதன் இதழ்கள் தெருக்கள்; நடுவி லுள்ள பொகுட்டு இறைவன்கோயில்; பூவின் மகரந்தம் தமிழ்க்குடிமக்கள்; அதை உண்ணவரும் வண்டுகள் புல வர்கள் என்று இன்னொரு பாட்டு அழகு படக் கூறுகிறது. இதனை,

“ மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரை
பூவொடு புரையுஞ் சீரூர்பூவின்
இதழகத் தனைய தெருவமிதழகத்
தரும் பொருட்டனைத்தே அண்ணல்
கோயில்”

என்று ஒரு பழம் புலவர் கூறுகிறார்.

புறநானூற்றில், ‘மாடமலி மதுரை’, ‘வானத் தன்ன வளநகர்’ என்று புகழப்படுகிறது. சிலப்பதி காரத்தில்,

“ ஆயிரங்கண்ணோன் அருங்கலச் செப்பு
வாய் திறந்தன்ன மதிலக வரைப்பு”

என்று இந்திரன் ஆபரணப் பெட்டி யைத் திறந்து வைத்தது போல மதுரையின் உள்ளமைப்பு இருந்த தாகக் கூறப்படுகிறது. திருமுரு காற்றுப்படையில், நக்கீரர், போரே யில்லாத வாயிலுடையது மதுரை என்றும், திருமகள் நிலைத்து நிற்கும் கடைத் தெருக்கள் உடையது என் றும் பெருமிதத்துடன் கூறுகிறார்.

மதுரையம்பதியின் தெய்வீகத் தன்மையை உலகுக்கு விளக்கிய பெருமை திருஞான சம்பந்தருக்கே உரியது. இத்தலத்திற்குப் பத்து திருப்பதிகங்கள் பாடியுள்ளார். மதுரையை ஆண்ட கூன் பாண்டியன் சமணர் தூண்டுதலால் சம்பந்தரு டைய மடத்துக்குத் தீவைத்தான். அத்தீ‘பையவே சென்று பாண்டிய தற்கு ஆகவே’ என்று ஏவினார் சம் பந்தர். அத்தீ சூலை நோயாய் மன் னனைப் பற்றிற்று. அரசனின் மனைவி மங்கையர்க்கரசியும், அமைச்சர் குலச்சிறையாரும் சைவ மதத்தைத் தழுவியிருந்தனர். அரசன் மட்டும் சமணராயிருந்தான். சம்பந்தரைத் தருவித்து இந்நோயைப்போக்குமாறு மங்கையற்கரசியார் வேண்டினாள்.

“ தந்திரமாவது நீறு சமயத்திலுள்ளது
நீறு
...
செந்நர்வாய் உமைபங்கன் திருவால
வாயன் திருநீறே”

என்று திருநீற்றுப்பதிகம் பாடி, திரு நீறளித்து அரசனது வெப்புநோயைப் போக்கினார் ஆளுடைய அடிகள்.

அரசனும், அவனுடைய குடிமக் களும் சமண சமயத்திலிருந்து சைவ சமயத்திற்கு மாறினார்கள். இன்னும் பல அற்புதங்களை அங்கே நிகழ்த்தி னார். பாண்டிய மன்னன் மனைவி மங்கையர்க்கரசியார், அவன் மந்திரி குலச்சிறையார் இவர்களின் திரு நெறித்தொண்டை சம்பந்தர் புகழ்ந்து பாடினார்.

இறைவனைத் தவிர்த்து எவரையும் புகழ்ந்து பாடாத சம்பந்தர் மதுரை யில் மங்கையர்க்கரசியை நோக்கி, ‘உம்மைக் காண வந்தனம்’ என்று முன்னிலைப்படுத்திக் கூறி,

“ முத்தின்றாழ் வடமும் சந்தனக்குழம்பு
நீறுந்தன் மார்பினின் முயங்க,
பத்தியார்கின்ற பாண்டிமாதேவி”

என்று கூறிச் செல்லுதலால் மங்கை யர்க்கரசியாரின் சிவ பக்தியும் சிறப் பும் எளிதில் விளங்குவதாகும்.

“ .........வெள்ளை நீறணியும்
கொற்றவன் தனக்கு மந்திரியாய
குலச்சிறை குலாவி நின்றேத்தும்”

என்று பாண்டியனது மந்திரியாகிய குலச்சிறையாரும் சிவ பக்தராய் விளங்கினமையை நாயனார் பாராட்டு வர். ‘பன்னலம் புணரும் பாண்டி மாதேவி குலச்சிறையெனுமிவர் பணி யும்’ ஆலவாய் என்று அன்பு குழையப் பாடுவர் நாயனார்.

“ அங்கயற்கண்ணி தன்னொடு மமர்ந்த
ஆலவாயாவது மிதுவே”

என்று அம்பிகையின் பெயரையும் சம்பந்தர் கூறக் காணலாம். மீனாட்சி என்ற பெயரின் பொருள் ‘அங்கயற் கண்ணி’ என்பதாகும்.

அப்பர் சுவாமிகள் இத்தலத்தை அடைந்து,

ஆதியே ஆலவாயில் அப்பனே
அருள் செய்யாயே!''

என்று உருகிப் பாடியுள்ளார்.

நின்ற சீர்நெடுமாறன் என்ற அப் பாண்டிய மன்னனும், அவன் பட்டத் தரசி மங்கையர்கரசியாரும், குலச் சிறையாரும் அறுபத்து மூன்று நாயன் மார்களுள் இடம் பெறும் பேறு பெற் றனர். 'மும்மையால் உலகாண்ட மூர்த்தி நாயனரும் இத்தலத்தே இருந்து முத்தியடைந்தார்கள்' என வரலாறு கூறும்.

திருநாவுக்கரசர் இத்தலத்தைப் பற்றி இரண்டு பதிகங்கள் பாடியுள் ளார். மாணிக்க வாசகர் திருவாச கம், திருக்கோவையார் என்ற இரு நூல்களிலும் மதுரையைப் பற்றியும், இறைவன் திருவிளையாடல்களையும் பல பாடல்களில் விதந்தோதியிருக் கிறார். அருணகிரியாரும் தமது திருப் புகழில் மதுரையைப் பற்றிப் பாடி யிருக்கிறார்.

மதுரை திருஞான சம்பந்தர் ஆதீ னத்தின் முதல் குருமூர்த்தியான திரு ஞான சம்பந்தரும், தருமபுர ஆதீ னத்து ஆதி குருமூர்த்தியான குரு ஞான சம்பந்தரும், திருப்பனந்தாள் காசி மடத்து முதல் தலைவர் குமர குருபரரும் இத்தலத்தே இறைவன் திருவருள் பெற்றார்கள் என்பது குறிக்கத் தக்கது.

மதுரையில் மூன்றும் தமிழ்ச் சங்கம் இருந்தது. பல புலவர்கள் இருந்து தமிழ் ஆராய்ச்சி செய்தனர். இச் சங்கத்திலேதான் உலகப் பொது மறையான 'திருக்குறள்' அரங் கேற்றப் பெற்றது என்பது வெள் ளிடை மலையாகும். 'உயர்மதில் கூட லின் ஆய்ந்த ஒண் தீந்தமிழ்' என் பதும், 'நன்பாட்டுப் புலவனுய்ச் சங்க மேறி நற்கனகக்கிழி தருமிக்கருளி னேன் காண்' என்பதும் "கலியன் சொன்ன சங்கத் தமிழ் மாலை பத்தும்''



திருமலை நாயக்கர் மஹால்

என்று திருமங்கையாழ்வார் அருளி யதும் மதுரையில் சங்கமிருந்ததைச் சங்கையறத் தெரிவிக்கின்றன. இப் போது மதுரையில் நாலாம் சங்க மிருந்து தொண்டாற்றுகிறது.

மதுரை ஐந்து நிருத்த சபைகளில் ஒன்று. இதை இரசித சபை அல்லது வெள்ளியம்பலம் என்று கூறுவர். இங்கு இறைவன் நிகழ்த்தும் திருக் கூத்தை ஆனந்தத் தாண்டவம் என் பர். தாண்டவமூர்த்தி வழக்கத்திற்கு விரோதமாக வலது காலைத் தூக்கி (கால் மாறி) இடது கைக்குப் பதி லாக வலது கையால் கஜஹஸ்த முத் திரை பிடித்து நடனம் ஆடுகிறார். ஒரு பாண்டிய மன்னன் வேண்டு கோளுக்கிணங்கிக் கால் மாறி ஆடிய தாக ஐதீகம். தவிர, பதஞ்சலியும் வியாக்கிரபாதரும் மதுரையை அடைந்த போது அவர்களுக்கு வெள்ளியம்பலத்தில் நடனம் ஆடிக் காட்டியதாக ஒரு ஐதீகமும் உண்டு. 'கூடல் மாநகர் ஆடிய அமுதை உண்டு களித்த தொண்டர்' என்ற கல்லாட அடிகள் நினைவிற்குரியன.

நடராஜர் தெற்கு நோக்கி இருக் கிறார். இங்கே அம்பலமுடன் நட ராஜரும் வெள்ளிக் கவசத்தால் மூடப் பட்டுள்ளார். சிலப்பதிகாரத்தில் 'வெள்ளியம்பலத்து நள்ளிருள் கிடந் தேன்' என்று கூல வாணிகன் சீத்தலைச் சாத்தனர் கூற்றாக வருவது இதன் பழமையை நன்கு புலப்படுத் தும்.

சிதம்பரத்தைச் சேர்ந்த புலவர் ஒருவர், மதுரைப் புலவர் ஒருவரைப் பார்த்து 'எங்கள் ஊர் பொன்னம் பலம்; உங்கள் ஊர் வெள்ளியம்பலம் தானே' என்றார். 'பொன்னம்பலத்தை விட வெள்ளியம்பலம் கால் மாற்றுக் கூட' என்று தயங்காது உரைத்தார் மதுரைப் புலவர். 'பொன்னுக்கு மாற்று உண்டு, வெள்ளிக்கு மாற்று ஏது?' என்றார் தில்லைநகர்க்காரர். 'உங்கள் ஊரில் கூத்தப் பெருமான் வலது காலை ஊன்றி இடது காலைத் தூக்கியாடுகிறான். ஆனால், எங்கள் மதுரையிலோ இடது காலை ஊன்றி வலது காலைத் தூக்கி ஆடுகிறான். அப்படிக் கால்மாறி ஆடியதால் கால் மாற்றுகூட என்றேன்' என்று விளக்கம் செய்தார், ஆலவாய் அறிஞர். கால் மாற்று என்ற இரண்டு சொற்களில் 64 திருவிளையாடல்களில் ஒன்றான கால் மாறிய திருவிளையாடற் கதை யைச் சுருங்கச் சொன்னது போற்றி இன்புறற்பாலது.



அன்னை மீனாட்சி

இனி, இத்தலத்திற்குத் தனிப் பெருஞ்சிறப்புத் தருவது சிவபெருமான் இங்கு நிகழ்த்தியருளிய அறுபத்து நான்கு திருவிளையாடல்கள். இதைப் போன்று வேறு எத்தலத்திலும் நிகழ்ந்ததில்லை. இங்கு கண்ணன் வட மதுரையில் நிகழ்த்திய திருவிளையாடல்கள் நமக்கு நினைவுக்கு வருகின்றன. இந்த திருவிளையாடல்கள் திருவிழாக்களாகக் கோயிலில் நடைபெறுகின்றன.

மதுரைக்கு அருகே காணப்படும் ஆனை மலை, நாகமலை, பசுமலை இவைகள் கல்லாய்ச் சமைந்து கிடப்பதற்கும் திருவிளையாடற்புராணத்தில் கதைகள் உள்ளன.

மதுரை மாநகர் வையையாற்றில் கரையில் அமைந்திருக்கிறது. 'மாடு கட்டிப் போரடித்தால் மாளாது செந்நெல் என்று ஆனைகட்டிப் போரடிக்கும் அழகான தென் மதுரை' என்பது மதுரை நகர் வளத்தை நம் கண் முன்னே கொண்டு வந்து நிறுத்துகிறது. மதுரை நகர் அமைப்பையும் கோயில் சிற்பங்களையும் போல் உலகில் நான் வேறெங்கும் கண்டதில்லை' என்று காலஞ்சென்ற பேரறிஞர். டாக்டர். ஆர். கே. சண்முகம் செட்டியார் கூறியிருக்கிறார். மேல் நாட்டு அறிஞர்களும் மதுரையைப் பற்றி அத்தகைய கருத்தையே வெளியிட்டிருக்கின்றனர்.

கோயில் :

கோயில் ஊரின் நடுநாயகமாக விளங்குகின்றது. அதன் மதிலைச் சுற்றி நேர்க்கோடாக எல்லா முக்கிய தெருக்களும் அமைந்திருக்கின்றன. ஆலயத்தைச் சுற்றி நான்கு மாசித் தெருக்களும், அதற்கு அப்பால் நான்கு ஆவணித் தெருக்களும், அதையடுத்து நான்கு சித்திரை வீதிகளும் உள்ளன. அந்தந்த மாதங்களில் நடக்கும் விழாக்களில் இறைவன் இந்தத் தெருக்களில் எழுந்தருளுவதால் அவற்றிற்கு இப்பெயர் ஏற்பட்டது. நான்கு திக்குகளிலும் நான்கு பிரம்மாண்டமான வாயில்களும் அவற்றிற்கு மேல் வான் அளாவிய கோபுரங்களும் உள்ளன. ஆடி வீதி கோயிலின் முதற்பிராகாரமாகும்.

வடக்கு வாயில் கோபுரம் மொட்டைக் கோபுரம். ஆனால், அது பிற்காலத்தில் நகரத்து வைசியர்களால் கட்டப்பட்டுப் பூரண கோபுரமாயுள்ளது. இந்த மொட்டைக் கோபுரத்தின் கீழ்க் கோயிலுக்கு வெளிப்புறமாக மொட்டைக் கோபுரத்தான் என்ற முனியாண்டியின் கோயில் இருக்கிறது. இந்த முனியாண்டி மிகுந்த வரப்பிரசாதி. அவருக்குச் செவ்வாய், வெள்ளி ஆகிய தினங்களில் விசேஷ பூஜை நடைபெறும்.

கீழைக் கோபுரம் இந்திர விமானம் என்றும், மேலைக் கோபுரம் வருண விமானம் என்றும் பெயர் பெறும். மேலைக் கோபுரம் 150 அடி உயரம் கொண்டு அழகான சுதைச் சிற்பங்களுடன் விளங்குகிறது. கிழக்குக் கோபுரம் உபயோகத்தில் இல்லை. இதன் அடிவாரத்தில் மதுரை வீரன் கோயில் இருக்கிறது. இவனுக்குப் பூஜை நடந்த பிறகுதான் மீனாட்சியம்மனுக்கு ஆராதனை நடக்கும். கள்ளர்களை அடக்க வட நாட்டிலிருந்து வரவழைக்கப்பட்ட வீரன் இவன். இவன் கள்ளர்களை அடக்கிப் பெரு வீரனாக விளங்கினான். ஆள் மாறாட்டத்தினால் கைகால் வெட்டப்படவே,



**வண்டூர் தெப்பக்குளம்.**
**மதுரைக் கோயிலைப்போலவே 75 ஏக்கர் விஸ்தீரணமுள்ளது.**

தீக்குளித்து உயிர் நீத்தான். இவன் கம்பத்தடி மண்டபத்திற்கருகில் அக்கினிப் பிரவேசம் செய்ததாகக் கூறுவர்.

தெற்கு வாயில் கோபுரந்தான் மிக உயரமானது. கிழக்குத் திக்கில் உள்ள அஷ்ட சக்தி மண்டபத்தின் வழியாகத் தான் ஆலயத்திற்குச் செல்வது வழக்கம். கோயிலின் நீளம் 850 அடி; அகலம் 790 அடி; ஒன்பது கோபுரங்கள் உள்ளன. அவைகளில் நான்கு வாயிற் கோபுரங்கள் உயர்ந்தவை. அந்த நான்கினுள்ளும் தெற்குக் கோபுரம் மிக உயர்ந்தது; 152 அடி உயரம் கோயில் மிகவும் அழகான முறையில், ஒழுங்கான முறையில் அமைக்கப்பட்டிருக்கிற தென்பதை ஒரு குறிப்பினால் புலப்படுத்தலாம். அதாவது,கீழ்க்கோபுரத்தின் நடுவிலிருந்து மேல் கோபுரத்துக்கு ஒரு கோடு கிழித்தால் அது சரியாகச் சிவலிங்கப் பெருமான் வழியாகப் போகும். அதே போல் வடக்கு தெற்கு கோபுரங்களுக்குக் கோடிட்டுப் பார்த்தால் சுந்தரேசர் திருக்கோயிலை இரண்டாகப் பகிர்ந்து செல்லும். இதனால் முற்காலத்துச் சிற்பிகளின் அற்புதத்திறன் தெரிய வருகின்றது.

மீனாட்சியம்மன் சந்நிதியில் நுழையும்போது முதலில் காணப்படுவது அஷ்ட சக்தி மண்டபம். தூண்களில் அஷ்ட சக்திகளின் உருவங்களிருக்கின்றன. அம்மண்டபத்துள் இரு மருங்கினும் கணபதியும் ஆறுமுகனும் காட்சி தருகின்றனர். அதைத்தாண்டி உள்ளே சென்றால் விசாலமான ஒரு மண்டபம் உண்டு. அதற்கு மீனாட்சி நாயக்கர் மண்டபம் என்று பெயர். அதைக் கட்டியவர் திருமலை நாயக்கரின் அமைச்சர்களில் ஒருவரான மீனாட்சி நாயக்கர்.

அம்மண்டபத்தைக் கடந்ததும் இருட்டு மண்டபம் அல்லது முதலி மண்டபம் அடையலாம். அதில் பிட்சாடனர், மோகினி, அனுசூயை, முனிவர்கள் இவர்களுடைய உருவங்கள் அற்புதச் சிற்ப வேலைப்பாடுடன் இருப்பதைக் காணலாம். அதற்கப்புறம் பொற்றாமரைக்குளம். அதன் பக்க மண்டபச் சுவர்களில் 64 திருவிளையாடல்களும் ஓவியங்களாகத் தீட்டப் பெற்றிருக்கின்றன. ஒரு புறச் சுவரில் அண்மையில் தருமபுர ஆதீனத்தாரால் திருக்குறள் 1330 பாடல்களும் வெண் கற்களில் பொறிக்கப் பெற்றிருப்பது கண்டு இன்புறற்பாலது. இப்பொற்றாமரை வாவி புலவர்கள் நூல்களின் ஏற்றத்தை அளக்கும் அளவு கோலாக விளங்கியது. தம்மையே எதிர்த்த நக்கீரனை இறைவன் பொற்றாமரை வாவியில் விழச் செய்து மீண்டும் கரையேற்றினார் அல்லவா!

பொற்றாமரைக் குளத்தின் மேற்குப் பக்கத்தில் கிளிக்கட்டு மண்டபம் இருக்கிறது. அதில் சித்தி விநாயகர் கோயிலும், முருகன் கோயிலும் உள்ளன. அந்த மண்டபத்தின் தூண்களில் பஞ்ச பாண்டவர்கள், திரௌபதி இவர்களின் உருவங்கள் வெகு அழகாகச் செதுக்கப்பட்டிருக்கின்றன.

அம்மன் சந்நிதிக்குள் நுழையும் போது இரு துவார பாலர்களின் சிலைகள் கம்பீரமான தோற்றத்துடன் காட்சியளிக்கின்றன. உள்ளே இரண்டு பிரகாரங்கள் உண்டு. முதல் பிரகாரத்தில் நுழைந்ததும் இடது பக்கத்தில் திருமலை நாயக்கர், அவருடைய இரு மனைவியர் இவர்களின் உருவங்கள் இருக்கின்றன. மகா மண்டபத்தைத் தாண்டி அர்த்த மண்டபம் சென்றதும் கருப்ப இல்லில் மீனாட்சியம்மையின் தரிசனம் ஆகிறது. மீனாட்சியம்மை ஆண்டியான சொக்கரை மணந்து கொள்ளுகிறாள். மீனாட்சி சுந்தரருடைய திருமணக் காட்சியைக் கம்பத்தடி மண்டபத்தூணில் அழகாகச் செதுக்கி இருக்கிறார்கள். திருமால் தாரை வார்த்துக் கன்னிகா தானம் செய்து கொடுக்கிறார். பிரம்ம தேவர் கீழே ஓமம் செய்து கொண்டிருக்கிறார். மீனாட்சியம்மையின் மூலவர் சிலை தென்னிந்தியாவில் உள்ள அழகான சிலைகளில் ஒன்று. அம்மையின் புன்சிரிப்பு நம்மை அன்புடன் வரவேற்கிறது; அத்திருவுருவத்தைக் கண்டவர்கள் பக்திப் பரவசம் அடைகின்றனர்.

அம்மன் கோயிலை விட்டு சுந்தரேசர் கோயிலுக்குள் சென்றால் எதிரில் தோன்றுபவர் மகாகணபதி. இந்தப் பெரிய விக்கிரகம் திருமலை நாயக்கர் வண்டியூர் தெப்பக் குளத்தை வெட்டும்போது கிடைத்ததாகச் சொல்லப்படுகிறது. சுந்தரேசர் கோயிலின் வெளிப் பிரகாரத்தின் வடமேற்கு மூலையில் தமிழ்ச் சங்கப்புலவர்களின் கோயில் இருக்கிறது. சங்கப் புலவர்கள் நாற்பத்தெண்பரும் அவர்களுடன் சோமசுந்தரர் நாற்பத்தொன்பதாமவராக இருந்து தமிழ் ஆராய்ச்சி செய்த இடம் இது என்பர்; சங்கத்தார் கோயில் எனவும் அழைப்பதுண்டு.

கொடி மரத்தைச் சுற்றியுள்ளது கம்பத்தடி மண்டபம். கொடி கம்பத்தைச் சுற்றியுள்ள பெருங்கற்றூண்களில் பார்வதி, பரமசிவம், இடப வாகனர், ஆனையுரி போர்த்த அண்ணல், தேரூர்ந்த திரிபுராந்தகர், அர்த்த நாரீசுவரர், அரிகரர், தட்சிணாமூர்த்தி, இராவணனுடன் திருக்கயிலை மலைக்காட்சி, நடராஜர், மீனாட்சி சுந்தரேஸ்வரர் திருக்கல்யாணம் முதலிய உருவங்கள் அமைந்துள்ளன.

கம்பத்தடி மண்டபத்தின் கிழக்கு வாயிலின் இரு மருங்கிலும் உள்ள நான்கு தூண்களில் உள்ள உருவங்கள் மனத்தை விட்டகலா மாட்சிமையுடையவை. பெரிய ஆகிருதியில் ஒரே கருங்கல்லில் வேலை செய்யப்பட்ட பைரவர், வீரபத்திரர், சபாபதி காளி என்பன. காளியின் ஆடலும், ஆண்டவனின் ஊர்த்துவ தாண்டவமும் காட்டும் இந்த உருவங்களின் சிற்ப வேலைப்பாட்டின் நுணுக்

கம் சொல்லும் தரத்தன்று. அந்தச் சிற்பியின் பேராற்றல் போற்றத்தக்கது.

சுந்தரேசர் கோயிலின் உட்பிர காரத்தில் அறுபத்து மூன்று நாயன் மார், கலைமகள், தட்சணாமூர்த்தி, உத்ஸவமூர்த்திகள், காசிவிசுவநாதர், துர்க்கை, எல்லாம் வல்ல சித்தர், சண்டேசுவரர், திருமகள் முதலியவர் களின் கோயில்கள் உள்ளன. மேலைப் பிரகாரத்தின் வடகோடியில் தல விருட்சமான கடம்பமரம் இருக் கிறது.

சொக்கநாதர் சந்நிதிக்குச் செல்லு முன் கால் மாறியாடிய நடராஜ மூர்த்தி, சிவகாமியம்மை இவர்கள் காட்சியளிக்கிறார்கள். பிறகு சுயம்பு மூர்த்தியான சொக்கலிங்கப் பெரு மானின் திருவருட் காட்சி கிடைக் கிறது. இந்திரனால் கொண்டு வரப் பெற்ற அஷ்டகிரி விமானத்தில் பெரு மான் எழுந்தருளியுள்ளார். எட்டு யானைகள் அவ்விமானத்தைத் தாங்கி நிற்கின்றன. அவை உயிருள்ள யானை கள் போலவே காணப்படுகின்றன.

இறைவனுக்குச் சொக்கநாதர் என் பது சாதாரணமாக வழங்கும் பெயர். கடம்பவன சுந்தரர், கல்யாண சுந் தரர், சோம சுந்தரர், மீனாட்சி சுந்த ரர், சுந்தரேசர் எனப்பல பெயர்கள் உள. தேவிக்கு மீனாட்சி, அங்கயற் கண்ணம்மை, மாணிக்கவல்லி முதலிய திருநாமங்கள் வழங்கப்படுகின்றன.

கோயிலுக்குள் காண வேண்டிய முக்கியமான மற்றொன்று ஆயிரக் கால் மண்டபம். இதை 16-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் கிருஷ்ணப்ப நாயக்கர் என்ற மன்னன் தன் அமைச்சர் அரிய நாயக முதலி யார் மேற்பார்வையில் கட்டினான். இம்மண்டபத்தை எங்கிருந்து பார்த் தாலும் தூண்கள் ஒரே ஒழுங்காக அமைந்திருப்பதைக் காணலாம். இம்மண்டபத்தினுள் நுழையும்போது அரிய நாயக முதலியார் குதிரைமேல் இருப்பது போன்ற உருவம் அமைக்கப் பெற்றிருக்கிறது.

# தாயுள்ளம்

சரஸ்வதி கடாக்ஷம் நல்கும் சிந்தாமணி என்னும் சீரிய மந் திரத்தை தனது (சிறு) குழந்தைக்கு கற்றுக் கொடுத்து இருந்தாள் மாமல்லதேவி. குழந்தை சதா அம்மந்திரத்தைக் கூறிக்கொண்டு இருக் கும். ஒரு நாள் மாமல்லதேவி ஓய்வாகப் பாயில் படுத்து இருந்தாள். அப்போது அச்சிறு குழந்தை காலில் தண்டையும் நாவில் மந்திரமும் முழங்க விரைந்து வந்து தாயின் மார்பில் ஏறி அமர்ந்தது. அப்போது தாயின் சிந்தையில் ஒரு எண்ணம் எழுந்தது. மந்திர உச்சாடன முறை யில் வாமாசாரம் என்பது ஒரு விதிமுறை. அதன்படி சவத்தின்மீது இருந்து கொண்டு மந்திரத்தை ஜபித்தால் அம்மந்திரத்தின் வீரியம் பெருகி விரைவாகவும் நிறைவாகவும் பயன் அளிக்கும். இந்த உண் மையை மாமல்லதேவி அறிந்து இருந்தாள். சில ஆண்டுகளுக்குமுன் தன் கணவன் அரசவை கவியரங்கத்தில் தோல்வி கண்டு துவண்டுபோய் மாண்ட நிகழ்ச்சி மாமல்லதேவியின் உள்ளத்தை குடைந்து கொண் டிருந்தாள். தனது புதல்வன் பெரும்புலவனாகத் திகழ வேண்டும் என அவள் கனவு கண்டு கொண்டிருந்தாள். இப்போது வாய்ப்புக் கிட்டியுள் ளது என்று எண்ணினாள். உடனே தன் கழுத்தை வெட்டிக் கொண்டு உயிர் நீத்துப் பிணமானாள். சவத்தின்மீது இருந்த குழந்தையின் நாவில் சிந்தாமணி மந்திரம் சீராகத் தொடர்ந்து கொண்டிருந்தது. சரஸ்வதி கடாக்ஷம் பெற்று அக்குழந்தை காலப் போக்கில் பெரும் கவிஞனாகத் திகழ்ந்தது. நைஷத காவியம் தந்த ஸ்ரீ ஹர்ஷ கவியின் பாலபருவ சரிதம் இது.

—ஆர். சுப்பராவ்-திருக்கோவலூர்.

# நவரத்தினங்கள்

(அசல்—போலி எது என்று காண)

| | |
|---|---|
| முத்து | என்றால் நுரை கலந்த பாலில் மிதக்க வேண்டும். |
| மரகதம் | குதிரையின் முகத்தருகே அதனைக் கொண்டு சென்றால் தும்ம வேண்டும். |
| பச்சை | குத்து விளக்கின் ஒளியின் முன் பிடித்தால் சிகப்பாகத் தெரியும். |
| வைரம் | இதன்மேல் வைர ஊசியை பலமாக வைத்து அழுத்தினால் வைரக்கல் உடையாது. |
| கோமேதகம் | பசுவின் நெய்யில் போட்டால் குங்குமப்பூ வாசனை வரும். |
| பவளம் | சோதனை ஊசி, மையத்தில் தவிர வேறு இடத்தில் இறங் காது. |
| புஷ்பராகம் | சந்தனக் கல்லின்மீது வைத்தால் தாமரை புஷ்பத்தின் வாசனை வரும். |
| வைடூர்யம் | பச்சிலை சாற்றில் போட்டால் வெள்ளை நிறமாக மாறும். |
| நீலம் | பச்சிலை சாற்றில் போட்டால் மெதுவாக ஒலி கிளம்பும். |

தகவல்: ஏழுமலையான்-திருப்பதி.

இன்றும் இங்கு, சத்திய அரிச்சந்திரன், சந்திரமதி, குறவன், இரதி முதலிய உருவங்களும் காணப்படுகின்றன. இம்மண்டபத்தினுள்ளே இருக்கும் 'கலைமகள்' உருவம் பார்க்கத்தக்கது. வடக்குக் கோபுர வாயிலின் உட்புரத்தில் ஐந்து இசைத் தூண்கள் உள்ளன. அவை ஒவ்வொன்றிலும் 22 சிறு தூண்கள் இருக்கின்றன. ஒவ்வொன்றையும் தட்டினுல் பல வேறு இனிய ஓசைகள் எழும்புகின்றன. சுந்தரேசர் சந்நிதிக்கு எதிரில், கோயிலுக்கு வெளியில் புது மண்டபம் என்ற வசந்த மண்டபம் இருக்கிறது. இதைத் திருமலை நாயக்கர் கட்டினுர். இதன் உள் வரிசைத்தூண்களில் விசுவநாதர் நாயக்கர் முதல் திருமலை நாயக்கர் வரை இருந்த பத்து மன்னர்களின் உருவச் சிலைகள் இருக்கின்றன. இதற்கு வெளியிலுள்ள இராய கோபுரமும் திருமலை நாயக்கரால் தொடங்கப் பெற்று முற்றுப்பெருமல் போய்விட்டது.

கி. பி. 1310-ல் தென் இந்தியாவின்மேல் படை எடுத்து வந்த மாலிக் காபூர் என்ற மகமதியசேனைத் தலைவன் கோயிலின் 14 கோபுரங்களையும், மதில்களையும் தகர்த்துத் தரை மட்டமாக்கி விட்டான். ஆனுல், அப்படைத்தலைவர்களுள் இருந்த மன வேற்றுபாட்டின் காரணத்தால் மீனுட்சி, சுந்தரேசர் இவர்களின் உட்கோயில்கள் இரண்டும் அழிக்கப்படாமல் தப்பின. இதுவும் அங்கயற்கண்ணி தன்னேடும் அமர்ந்த ஆலவாய் அண்ணலின் மகிமைதான் போலும்!

விஜயநகர சாம்ராஜ்யத்தின் பிரதிநிதியாக மதுரையிலிருந்து ஆட்சி செய்த விசுவநாத நாயக்கர் கி. பி. 1560-ல் கோயில் திருப்பணிக்கு ஒரு திட்டம் வகுத்தார். மதில்களையும் கட்ட ஆரம்பித்தார். தொடர்ந்து பின் வந்த மன்னர்களும், செல்வர்களும், வணிகர்களும் திருப்பணியை நிறைவேற்றினர். இது முடிவடைய 120ஆண்டுகள் ஆயிற்றென்றும்,அதற்கான செலவு சுமார் ஒரு கோடியே இருபது இலட்சம் ரூபாய் மதிப்பிடலாமென்றும் அறிஞர் கருதுகின்றனர்.

மதுரைக் கோயிலில் கல்லாலும் சுதையாலும் அமைக்கப்பட்ட உருவங்களின் எண்ணிக்கையில் பார்க்கும்போது செலவான மதிப்புத் தொகை அவ்வளவு அதிகம் என்று கூறுவதற்கில்லை. மதுரை நகரையும் கோயிலையும் அழகு பெறச் செய்வதில் பெரும் பங்கு கொண்டவர்கள் திருமலை நாயக்க மன்னரும், இராணி மங்கம்மாளும் ஆவார்கள். இவர்களின் பெயர்கள் தமிழகம் எங்கணும் மங்காப் புகழுடன் விளங்குகின்றன.

இனி மதுரையம்பதியில் பார்க்க வேண்டிய மற்றக் கோயில்களும் இருக்கின்றன. கூடலழகர் கோயில் மங்களாசாசனம் பெற்ற திவ்விய தேசங்களில் ஒன்று. திருமங்கையாழ்வாரும், திருமழிசையாழ்வாரும் இரண்டு பாசுரங்கள் அருளியுள்ளனர். இக்கோயிலின் அஷ்டாங்க விமானம் வெகு அழகானது. பெருமாள் கிழக்கு நோக்கி வீற்றிருந்த திருக்கோலம். தேவிமார் வகுளவல்லி, மரகதவல்லி, வரகுணவல்லி, மதுரைவல்லி ஆவர். ஏம புஷ்கரணி, சக்கரதீர்த்தம் ஆகியன தீர்த்தங்கள்.

திருவாப்புடையார் கோயில் என வழங்கும் "திரு ஆப்பனூர்" பாடல் பெற்ற சிவத்தலங்களுள் ஒன்று. வையையாற்றின் மற்ரெரு கரையில் உள்ளது. சம்பந்தர் பதிகம் பாடியுள்ளார். இன்றும் மதுரை வீரன் கோயில், வட ஆலவாய்க் கோயில், இம்மையில் நன்மை தருவார் கோயில், ஏகாம்பரர் கோயில், மதன கோபால சுவாமி கோயில், கிருஷ்ணன் கோயில், தல்லாக் குளம் பெருமாள் கோயில் முதலிய கோயில்களும் இருக்கின்றன.

மற்றும் அவசியம் மதுரையில் பார்க்க வேண்டியவை-வண்டியூர் தெப்பக்குளம், திருமலை நாயக்கர் மகால். இவைகளுள் பிரம்மாண்டமான தூண்களுடன் சுண்ணும்பு செங்கற்கள் இவைகளை மாத்திரம் பயன்படுத்திக் கட்டப் பெற்றது திருமலை நாயக்கர் மகால். வண்டியூர் தெப்பக்குளம் 1000 சதுர அடி பரப்புள்ளது. நடுவே பச்சைப்பசேலென்று ஜொலிக்கும் மரங்கள் நிறைந்த ஒரு தீவு உள்ளது. இங்குப் போய்வர படவசதிகள் உள்ளன. இதை வெட்டியவர் திருமலைநாயக்க மன்னராவா, இதனை மாரியம்மன் தெப்பக்குளம் என்றும் அழைப்பதுண்டு.

மதுரைக் கோயிலிலுள்ள கல்வெட்டில் ஒரு விநோதச் செய்தி காணப்படுகிறது. விஜயரங்க சொக்கநாத காலத்தில் கோயில் ஊழியருக்கு விடப்பட்ட சர்வமானிய நிலங்களின் மேல் வரி (Tax) விதிக்கப்பட்டது. அந்த அநீதியைப் பொறுக்க முடியாத சிப்பந்திகளின் பிரதிநிதியாக அவர்களுள் ஒருவன் கீழ்க்கோபுரத்தின் மேலே இருந்து வீழ்ந்து மாண்டான். அதனுல்தான் மக்கள் பெரும்பாலும் இந்தக் கோபுர வாயில் வழியாக வந்து மீனுட்சி சுந்தரேசுவரரை வழிபடுவதில்லை.

பல தலங்களில் உள்ள கோயில்களில் மீனுட்சி சுந்தரேசருக்குத் தனிக் கோயில்கள் இருக்கின்றன. இது ஒன்றே மதுரைக் கோயிலின் பெருமைக்குச் சான்று பகரும். இத்தலத்தின் தீர்த்தங்கள் பொற்றுமரைக்குளம், எழுகடல், வையை இவைகளாகும்.எல்லா மாதங்களிலும் இத்தலத்தில் திருவிழாக்கள் நடைபெறும்.

முன்பெல்லாம் மாசி மாதத்தில் மீனுட்சி சுந்தரேசர் திருக்கல்யாணமும், சித்திரைப் பௌர்ணமியில் அழகர் வையை ஆற்றில் இறங்கும் வைபவமும் நடைபெற்று வந்தன. சிவநேசச் செல்வரும், வைணவ பக்தருமான திருமலை நாயக்கர் இவ்விரண்டு திருவிழாக்களையும் ஒரு சேர சித்திரா பௌர்ணமியில் நடக்கும்படி ஏற்பாடு செய்தார். அப்படியே இப்போதும் வருஷந்தோறும் நடைபெறுகிறது. இந்தச் சித்திரைத் திருநாள் தான் மதுரையில் சிறந்த திருவிழா! இலட்சக்கணக்கான மக்கள் திரண்டு வந்து விழாவைக் காண்பார்கள். பலவகையாலும் மேம்பாடுற்று விளங்கும் மதுரையம்பதியைவந்து வணங்கி அங்கயற்கண்ணி பங்கனின் திருவருளைப்பெற வேண்டியது மக்களின் தலையாயக் கடனுகும்.

# திருஆனைக்காவும் சைவ சமயமும்

தமிழ் நாட்டில் திருச்சி நகருக் கருகில், திருஅரங்கநகருக்குக் கிழக்கே உள்ளது திருஆனைக்கா. இதுவே பிற்காலத்தில் திருவானைக் கா எனப் புகழ் பெற்ற ஸ்தலமா யிற்று.

காவிரி நதிக்கரையில், சந்திரதீர்த் தத்தின் அருகிலே உள்ள சோலையில், வெண் நாவல் மரத்தின் கீழ் இருந்த சிவலிங்கத்தை, ஒரு வெள்ளையானை தினந்தோறும் தெய்வ பக்தியோடு தனது துதிக்கையில் நீர் முகந்து வந்து சிவலிங்கத்திற்கு நீராட்டி, பூங்கொத்துகளைப் பறித்து, லிங்கத் திற்கு அணிவித்து, வணங்கி வழிபாடு செய்து வந்தது. அதனாலேயே அந்த சோலைக்கு "திரு ஆனைக்கா" என்ற பெயர் நிலைத்தது.

அங்கே இருந்த சிலந்தியொன்று இதே சிவலிங்கத்திற்கு வழிபாடு செய்து கொண்டு வந்தது. மரத்தின் சருகுகளும், தூசிகளும் லிங்கத்தின் மீது விழாதவாறு மிக்க பயபக்தி யோடு தன் வாய் நூலால் பந்த லிட்டு மகிழ்ச்சியுற்றது.

அடுத்த நாள் யானையானது சிலந்தி வாய் நூலாலிடப்பட்ட பந்தல் அப சாரம் எனக்கருதி, அப்பந்தலை அழித்து, வழக்கம் போல் சிவலிங்கத் திற்கு நீராட்டி, பூச்சொரிந்து வழி பட்டது.

தினந்தோறும் சிலந்தியின் தெய்வ பக்தியால் செய்யும் சேவையும், யானை யான பக்தன் புரியும் தெய்வத் தொண்டும், மாறி மாறி நடந்து கொண்டு வந்தன.

இரு பக்தர்களும், அவரவர்கள் சக்திக்குகந்தவாறு, இறைவன் மீது அன்புப்பணி புரிந்து வந்தனர்.

யானையின் செய்கையைக் கண்ட சிலந்தி மீண்டும் இறைவன் மீது தூசி களும், சருகுகளும் விழாதவாறு தடுக் கத்தன் வாய் நூலால் பந்தலிடுவதை யானை தினமும் அதை அழிப்பது தகாத செயல் எனச் சீற்றம்கொண்டு யானையின் அடாத செயலைத் தடுப் பது என உறுதிகொண்டு லிங்கத்திற்கு வாய் நூலால் பந்தலிட்டு விட்டு, யானையின் வருகைக்காக ஒரு புறம் மறைந்திருந்தது.

வழக்கம் போல யானையும் வந்தது. தனது துதிக்கையால் சிலந்தியின் வலையை அழிக்கும்போது, சிலந்தி யானது யானையின் துதிக்கைக்குள் புகுந்து, கடித்தது. சிலந்தியின் விஷத் தாலும் அதன் கடியினால் ஏற்பட்ட வேதனையாலும் துன்புற்ற யானை கீழே விழுந்து புரண்டுகொண்டு, தன் துதிக்கையால் பலமுறை பூமியில் மோத, துதிக்கைக்குள் சிக்கிய சிலந்தி மாண்டது. யானையும் சிலந்தியும் யின் விஷத்தால் இறந்தது. இருபக்தர் களும் இறைவன் பணியில் மாண்ட னர்.

சிவபிரான் இருவருக்கும் காட்சி அருளி, பக்தர்களான யானையையும் சிலந்தியையும் ஆட்கொண்டார். உடனுக்குடன் யானை சிவபதம் அடைந்தது. இறைவனுக்குப் பந்தலி டும் பணியில் விருப்பம் கொண்ட சிலந்தி சோழ குலத்தில் மன்னனாகப் பிறக்கும் பேறு பெற்றது. சிலந்தியின் பக்தியைப் போற்றி, திருஇராமலிங்க அடிகள் உடலுருகி மனந் திறந்து பாடுகிறார்;

" வாய்ச்சங்குநூலிழைத்த வாய்ச்சிலம்பி தன்னையர்
கோச்செங்கட் சோழனெனக் கூட்டினையே "

சுபதேவன் என்ற சோழ அரசன் கமலவதி என்ற மனைவியுடன் சோழ நாட்டினை ஆண்டு வந்தான். நெடு நாள் புத்ரபாக்யமின்றி வருந்தினான். தனது மனைவியுடன் அரசன் தில்லை

Dr. G. T. கோபாலகிருஷ்ண நாயுடு,
*திருப்பதி.*

யம்பதி சென்று, அம்பலவாணனை வணங்கி, தவம் புரியவே கமலவதி கருவுற்றாள்.

கரு வளர்ந்து, குழந்தை பிறக்கும் தருணம் வந்தது. ஜோதிட வல்லு நர்கள் அரசரிடம் அணுகிச் சொல் லுற்றனர்: "இன்னும் ஒரு நாழிகைக் குள் அரசி கமலவதி ஓர் ஆண் மகவு பெறுவாள்", என்ற நற்செய்தியைக் கூறினர். அதன்படியே அரசிக்கு ஆண் குழந்தை பிறந்தது. ஆனால் குழந்தையின் கண்களோ சிவந்து காணப்பட்டன. இதனைக்கண்ணுற்ற அரசி குழந்தையை அன்புடன் அணைத்துக்கொண்டு, "என் மகன் செங்கணன்" எனப் பெருமையுடன் கூறினாள். தன் மகன் உலகம் புகழும் சிறப்புப் பெறவேண்டும் என்ற ஆவல். ஆனால் மகனை ஈன்று, அளவிடமுடி யாத வேதனையால் அரசியின் உயிர்ப் பிரிந்தது.

# பன்னிரு ஆழ்வார்கள்

நம்மாழ்வாருக்குப் பெற்றோர் இட்ட பெயர் சடகோபன். இவர் ஏனைய ஆழ்வார்களிலும் சிறப்புற்று 'நம்மாழ்வார்' என்ற சிறப்புத் திருநாமத்தைப் பெற்றார். ஆழ்வார்களின் தலைவராகவும் விளங்குகிறார். இவர் சேனை முதலியார் அம்சமாகக் கருதப்படுகிறார். இங்ஙனமே பிற ஆழ்வார்களையும் ஒவ்வோர் அம்சமாகக் கூறுவது வைணவ மரபு.

| | |
|---|---|
| பொய்கையாழ்வார் | பாஞ்சசன்யாம்சம் |
| பூதத்தாழ்வார் | கதாயுத அம்சம் |
| பேழ்வார் | நந்துகாம்சம் |
| திருமழிசையாழ்வார் | சக்கராம்சம் |
| குலசேகராழ்வார் | கௌஸ்துபாம்சம் |
| பெரியாழ்வார் | கருடாம்சம் |
| ஆண்டாள் | பூமிதேவி அம்சம் |
| தொண்டரடிப்பொடியாழ்வார் | வைஜயந்தி மாலை அம்சம் |
| திருப்பாணாழ்வார் | ஸ்ரீவத்சாம்சம் |
| திருமங்கையாழ்வார் | சார்ங்காம்சம் |
| மதுரகவியாழ்வார் | ஸ்ரீவைநதேயாம்சம். |

—ஆர். சுப்பராவ்.

தாயை இழந்த குழந்தையை அரசன் சுபதேவன் ஜாக்கிரதையாக, கண்ணும் கருத்துமாக வளர்த்துவந்தான். குழந்தைக்கு 'கோச் செங்கண்'' என்ற பெயரும் இட்டான். அரசிளங்குமாரன் கோச்செங்கண் கல்வி கேள்விகளைப்பயின்றும்,போர்ப் பயிற்சியும் முறையே கற்றும் தேர்ச்சி பெற்றான். உரிய காலத்தில் அரசன் சுபதேவன் தன் குமாரனுக்கு மகுடத்தினைப் புனைந்து, கானகம் புகுந்து, கடுந்தவம் புரிந்து சிவபதம் அடைந்தான்.

இளவரசன் கோச்செங்கட்சோழன் நெறி பிறவாது ஆட்சி புரிந்து, புகழும் கீர்த்தியுமடைந்து, மக்கள் அன்பையும் ஆதரவையும் பெற்று வந்தான்.

ஒரு நாள் அரசனுக்குத் தன் முற்பிறவியின் உணர்வு வந்தது. திருவானைக்காவில் தான் முதலில் பெற்ற அருள் காரணமாக, அங்கு சிவபிரானுக்கு ஓர் அழகிய ஆலயம் கட்ட முனைந்தான். முற்பிறவியில் யானை செய்த இடரை நினைத்து, யானை புகாதவாறு அந்த ஆலயத்திற்கு சிறிய வாயிலையும் அமைத்தான். ஐந்து பூதத்தலங்களில் சிறந்து விளங்கும், அப்புலிங்கத் திருத்தலமே 'திருவானைக்கா' என்பது. அத்திருத்தலத்தில் இன்றும் கருவறை சிறு வாயிலாகத் தோன்றுகிறது. பக்தர் குழாம் குனிந்து, சிறு வாயிலைக் கடந்து கருவறைக்குச் செல்கின்றனர்,

அரசன் கோச் செங்கணானுடைய ஆழ்ந்த பக்தியைப் பாராட்டித் திருமங்கையாழ்வார் பகர்கின்றார்.

'' இருக்கிலங்கு திருமொழிவாய்
எண் தோள் ஈசற்கு
எழில்மாடம் எழுபதுசெய்
துலகம் ஆண்ட
திருக்குலத்து வளச்சோழன்
சேர்ந்த கோயில்
திருநறையூர் மணிமாடம்
சேர்மின்களே. ''

எனத் திருமங்கையாழ்வார் கோச்செங்கண் ஆட்சியைப் புகழ்கிறார்.

கோச்செங்க அரசன் சிவபிரானுக்காக எழுபது கோயில்களும், திருமாலுக்கு மூன்று தலங்களும் தன் ஆட்சியில் கட்டினான். திருமாலுக்கு எழுப்பின மூன்று தலங்களுள் திருநறையூர் ஒன்று. பல சிவாலயங்கள் புதுப்பிக்கப்பட்டு,திருவிழாக்களும் நியதிகளும் முறையே நடைபெற ஏற்பாடுகளையும் செய்தான். இறந்து சென்ற தன் தாயார் எண்ணங்களைப் பூர்த்தி செய்தான்.

சைவசமயத்தை உன்னத நிலைக்குக் கொண்டுவந்த நாயன்மார்களில் சிறந்தவரும், வயது முதிர்ந்தவருமானஅப்பரடிகள்சிலந்தி இறைவனைப் பூசித்ததையும், பிறகு கோச்செங்கணானகப் பிறவியெடுத்து, கோயில்களையெழுப்பின பாங்கையும் அழகுபடப்பாடுகிறார்.

'' சிலந்தியும் ஆனைக்காவில் திருநிழற்
பந்தர் செய்து
உலந்தவண் இறந்தபோதே
கோச்செங்க ணானுமாகக்
கலந்தநீர் காவிரிசூழ் சோணாட்டுச்
சோழர்தங்கள்
குலந்தனில் பிறப்பித்திட்டார்
குறுக்கை வீரட்டனாரே''

என்று கூறுகின்றார்.

அரசன் சுபதேவனும் அரசி கமலவதியும் கோச்செங்கணைப் பெற்ற பெருமையால் சோழமண்டலம் சிறப்பெய்தது.

மீண்டும் திருவானைக்காவிற்குப் புகழ் கொடுத்த திருநாவுக்கரசு நாயனார் அருளிய செய்யுளை நம் மனதில் நிறுத்துவோம்.

'' எத்தாயர் எத்தந்தை எச்சுற்றத்தார்
எம்மாடு சும்மாடாம் எவர்நல்லார்
செத்தால்வந் துதவுவார் ஒருவரில்லை
சிறு விறகால்தீமூட்டிச் செல்லா
நிற்பர்
சித்தாய வேடத்தால் நீடு பொன்னித்
திருவானைக் காவுடைய செல்வா
என்றன்
அத்தாவுன் பொற்பாதம் அடையப்
பெற்றால்
அல்லகண்டங் கொண்டியேன்
என்செய்கேனே ''

# கண்ணில் தெரியும் கைலாயம்

இப்பரத கண்டத்தில் பூலோக கைலாயம் எனப் போற்றப்படுவது தில்லைச் சிற்றம்பலம் ஆகிய சிதம் பரமே. வைணவ சமயத்தில் 'கோயில்' என்றால் திருவரங்கம் கோயிலையே குறிப்பதுபோல, சைவ சமயத்தில் 'கோயில்' என்பது சிதம் பரம் ஸ்ரீ சபாநாயகர் கோயிலையே குறிக்கும். 'சித்' என்பது ஞானம் என்றும், 'அம்பரம்' என்பது ஆகா யம் என்றும் பொருள்படும். சித்+ அம்பரம் = சிதம்பரம் ஆயிற்று. பஞ்சபூத தலங்களுள் எல்லாப் பூதங் களும் தோன்றி நின்று விளங்க இடம் தந்து நிற்கும் ஆகாயத்தலமாக இது திகழ்கிறது. தில்லையில் இறைவனைத் தரிசித்த முக்தியாம் என்றபடி முக்தித் தலங்களுள் ஒன்றாக இது விளங்குகிறது. ஐந்து சபைத் தலங் களில் இது பொற்சபைத் தலமாகும்.

உலகமே ஓர் ஆண் வடிவம். அதற் குத் திருவாரூர் மூலாதாரம்; திரு வானைக்கா கொப்பூழ்; திருவண்ணா மலை மணிபூரகம்; காளத்தி கண்டம்; காசி புருவ மத்தியம்; சிதம்பரம் இதயம். இவ்வண்ணம் உலக புருஷ னின் இதயத்தானமாக இச்சிதம்பரம் இலங்குகிறது.

வைணவர்களுக்கும் இது ஒரு முக் கிய திவ்விய தேசம். 'திருச்சித்திர கூடம்' என்று குலசேகர ஆழ்வா ராலும், திருமங்கை ஆழ்வாராலும் மங்களாசாசனம் பெற்ற புனிதத் தலம்.

திருமாலிடம் பாம்பணையாய் பணி புரியும் ஆதிசேஷன் ஒரு சமயம் பள்ளி கொண்டிருக்கும் பெருமாளின் திரு முகத்தில் திவ்ய ஒளி மலர்வதைக் கண்டு மலைத்தான். அவர் தமது சிந் தனை அரங்கில் கண்ட ஆனந்த நட ராஜரின் ஆனந்த தாண்டவமே அதற்கு காரணம் எனக் கண்டான். தானும் அத்திரு காட்சியினைக்கண்டு மகிழ்ந்திட முனைந்தான். திருமா லிடம் விடை பெற்று திருக்கையி லாயம் நோக்கி விரைந்தான். சிவ னாரின் திருவருளைப் பெற்று பதஞ்சலி முனிவரின் திருக்கோலத்தில் தில் லையை அடைந்து அங்கு வியாக்ர பாதர் துணை கொண்டு அம்பலவாண ரின் கூத்தினைக் காண ஆவலுடன் காத்து இருந்தார். ஒரு தைப்பூசத் திருநாள் அன்று அம்மையப்பராகிய ஆனந்தநடராஜர் பஞ்சாட்சரத்தைத் திருமேனியாகக் கொண்டு திருவம் பலத்தில் தோன்றி அன்னை சிவகாம சுந்தரி காண ஆனந்த நடனம் ஆடி யருளுகிறான். பதஞ்சலி, வியாக்ர பாத முனிவர் தவம் ஈடேறவும், மண் ணுலக மக்கள் கண்டு மாண்புறவும், அருள் வழங்கவும், படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல் அருளல் என்னும் ஐந்தொழில்களை யும் தன்னகத்தே கொண்டு ஆனந்த நடனம் ஆடும் காட்சியினை அன்று முதல் இன்று வரையில் அருளி வரு கிறான். ஆனந்தக் கூத்தனின் துடி யேந்திய கை படைத்தலும், அபயம் தரும் கை காத்தலும், அனலேந்திய கை அழித்தலும், முயலகனை மிதித்த பாதம் மறைத்தலும், தூக்கிய பாதம் அருளலும் புரிகின்றன. 'எடுத்த பொற் பாதம்' எனப் போற்றிப் பாடப்பெறும் இடது திருவடி அன்னை சிவகாமியின் சுந்தரத் திருவடி என் னும் அரிய செய்தி இங்கு தேன் சுவை தரும் தெவிட்டாத செய்தியாகும்.

தில்லைக்கூத்தனின் ஆனந்தக் கூத் தினைக் கண்டு பூசித்த உபமன்யு முனி வர் கண்ணபிரானுக்கே பேராசிரிய ராக விளங்கும் பேறு பெற்றார். திருமூலதேவநாயனார் திருக்கூத்துத் தரிசனம், சிவானந்தக்கூத்து, திருவம் பலச் சக்கரம் என்னும் நூல்களை யாத்துப் பரமனைப் பாடினார். சமயா சாரியர்கள் நால்வரும் காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கப் பாடி உலகை உய்வித்தருளினார்கள்.

திரு ஆர். சுப்பாராவ்
திருக்கோயிலூர்

மேலும சேக்கிழார் பெருமான் 'உலகெலாம்' என்று சிதகாசப் பெரு வெளியினின்றும் உண்டான செந் தமிழ்ச் சொல்லையே முதலாக வைத் துக் கொண்டு தொண்டர்சீர் பரவு வாராயினார். மற்றும் மறை ஞான சம்பந்தர், உமாபதி சிவம் முதலிய சந்தானாச்சாரியப் பெருமக்கள் இங்கு சாத்திரக் கருவூலத்தைத் திறந்து ஞானரத்தினங்களை மக்களுக்கு வாரி வழங்கியுள்ளார்கள். இத்தகுச் சிறப் பால் தில்லை சிவராஜதானியாகத் திக்கெல்லாம் ஒளி வீசித் திகழ்கிறது.

"பெரியானைப் பெரும்பற்றப் புலி
யூரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா
நாளே" — அப்பர்.



# திருமலையில் தங்கு வசதிகளுக்கான நன்கொடைத் திட்டம்

கலியுக வைகுண்டமெனக் கருதப்படும் திருமலையில் நின்றவண்ணம் அருள் புரியும் வேங்கடவனைக் காண நாட்டின் பல முனைகளிலிருந்து ஆயிரக்கணக்கான யாத்திரிகர்கள் திருமலைக்கு நாள்தோறும் வருகை புரிகின்றனர். அவர்கள் திருமலையில் தங்குவதற்கென்று திருமலை திருப்பதி தேவஸ்தானம் பல தர்ம சத்திரங்களையும், குடில்கள், விருந்தினர் விடுதிகள் போன்ற பல தங்கு வசதி கட்டிடங்களையும் கட்டியுள்ளது. வருகை புரியும் யாத்திரிகர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் பெருகி வருவதை மனதிற்கொண்டு மேலும் தற்போது உள்ள விருந்தினர் விடுதி, குடில்களின் மேல் பொதுமக்களின் நன்கொடைத் திட்டத்தின் கீழ்மற்றுமொரு தளத்தினைக் கட்டுவதென்று மேலாண்மை முடிவெடுத்துள்ளது. யாத்திரிகர்/பக்தர்களுக்குத் தொண்டு புரிந்திடும் ஓர் அறிய வாய்ப்பாக இரக்கமனமிக்க பொதுமக்கள் அல்லது தனியார் நிறுவனம் அல்லது அறக்குழு ஆகியன இத்திட்டத்தினைப் பயன்படுத்திக்கொள்ளும் என நம்புகிறோம்.

## முதல் தளம் :

ஆழ்வார் ஏரி, மங்களபாவி, சங்குமிட்டா, சேஷாத்ரிநகர், அஞ்சநாத்ரி, கருடாத்ரிநகர் ஆகிய கட்டேஜ்களின் ஏ மற்றும் பி பகுதிகளின் மேல் கட்டப்பட்டு வரும் 'சி' மற்றும் 'டி' பகுதிகள். 872 முதல் 1012 சதுர அடி பரப்புள்ளதாக இப்பகுதிகள் அமையும். இவ்வொரு பகுதிக்கும் வழங்கவேண்டிய நன்கொடைத் தொகை ரூ. 1. 50 இலட்சமாகும்.

## ராம் பகீச்சா விருந்தினர் விடுதிகள :

ஒவ்வொரு தளத்திலும் 50 அறைத்தொகுதிகள் வீதம் மூன்று தளங்களைக்கொண்ட மூன்று விருந்தினர் விடுதிகள் கட்டப்பட்டு வருகின்றன. இவற்றில் 166 அறைத்தொகுதிகள் நன்கொடையாளர்களுக்கு ஒதுக்கப்பட்டுவிட்டன. 44.5 சதுர மீட்டர் பரப்புள்ள ஓவ்அறைத்தொகுதிக்கான நன்கொடைத் தொகை ரூ. 60,000 ஆகும்.

## ஸப்தகிரி சத்திரங்கள் :

இச்சத்திரக்கட்டிடம் 9 தொகுதியினைக் கொண்ட 954 அறைகளுடன் விளங்கும். இவற்றில் 913 அறைகள் நன்கொடைத் திட்டத்தின் கீழ் ஒதுக்கப்படும். 12'×14' அளவில் இவ்வறைகள் விளங்கும். இவ்அறைக்கான நன்கொடைத் தொகை ரூ. 40,000 ஆகும்.

## 2-வது விருந்தினர் விடுதி :

சேஷாத்ரி நகரில் இரண்டாவது விருந்தினர் விடுதியில் உள்ள இரண்டு தளங்களில் கட்டப்பட்டுள்ள 26 அறைத் தொகுதிகள் நன்கொடைத் திட்டத்தின்கீழ் ஒதுக்கப்படும். 4.20 மீ × 4.20 மீ பரப்பளவில் இவ்வறைத் தொகுதிகள் விளங்கும். இவ் இரண்டாவது விருந்தினர் விடுதிக் கட்டிடத்திற்காகவோ அல்லது தளம் முழுமைக்கோ நன்கொடை பெற மேலாண்மை விழைகின்றது. விடுதி கட்டிடத்திற்கான நன்கொடைத் தொகை ரூ. 25 இலட்சமாகும்.

மேற்கூறிய இத்தங்கு வசதி கட்டிடங்களுக்கான நன்கொடையினை தனிநபர்/தனியார் நிறுவனம்/அறக்கட்டளை போன்ற எந்தப் பெயரிலும் வழங்கலாம்.

# சலுகைகள்

நன்கொடையாளர் அல்லது அவர் உறவினர்கள் அல்லது நிறுவனத்தின் அல்லது அறக்கட்டளையைச் சார்ந்த உறுப்பினர்களோ அல்லது அவற்றின் அலுவலர்களோ வருடத்தில் 60 நாட்களுக்கு, (ஒரு முறை தங்கிடும்போது 10 நாட்களுக்கு மிகாமல்) இலவசமாக அவர்கள் நன்கொடை அளித்த தங்கு வசதிகளில் தங்கலாம். அவர்கள் நன்கொடை வழங்காத தங்கு வசதிகளில் தங்க நேரிடின், வித்யாசப்படும் வாடகைத்தொகை மட்டுமே அவர்களிடமிருந்து வசூலிக்கப்படும்.

நன்கொடையாளர்களின் பெயர், முகவரி கொண்ட கற்பலகை ஒன்று முதல் தளம்/அறைத் தொகுதி/அறை ஆகியவற்றில் தகுந்த இடத்தில் பொருத்தப்படும். முழு விவரங்களுக்கு :

Executive Officer, T. T. Devasthanams, Tirupati - (A. P.) 517501. எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

**தரும் பொருள் சிறியதே : பெறும் அருள் பெரிதே:**

(16-ம் பக்கத் தொடர்ச்சி)

1. Is it a kind of literature produced in this age? Is the literature of the age is devotional?

   இந்தப் பக்தி இயக்கம் காலத்தின் கோலமா?

2. Is there any inspiration foom neighbours source literature? SourceSanskrit, Biblical etc.

   அண்டை மொழி இலக்கிய அல்லது சமஸ்கிருத, இலத்தீன், தமிழ் முதலான இலக்கிய தாக்கத்தால் உருவெடுத்தனவா?

3. Is it related only to a particular religious doctrine?

   குறிப்பிட்ட ஒரு சமயக் கொள்கையோடு மட்டுமே தொடர்புடையதா?

4. Is there anything historically promoted i.e., kings embraing a religion.

   வரலாற்றுப் போக்கிற்கு ஏற்ப அல்லது போக்கினைப் புலப்படுத்தும் பாங்கில் உருவானதா?

5. Literary form Are there folkmotives or classical forms or mixture of both?

   நாட்டுப் புறவியல் அல்லது செவ்வியல் வடிவில் அமைந்ததா? அல்லது இரண்டும் கலந்து அமைந்ததா?

6. Is it anthropomorphic (personal god).

   மனிதப்பண்பு கொண்ட கடவுள் ஒருவர் பற்றியதா?

7. Is it monotheism or pantheism?

   ஒரு கடவுள் பல கடவுள் கோட்பாடா?

இராமலிங்க அடிகளார் பக்தி இலக்கிய அனுபவமாக உலகிற்கு அளித்த பாடல் ஒன்று உள்ளது. அதன் வழி பக்தி இலக்கிய அனுபவங்களின் கூறுகள், படிநிலைகள் முதலியவற்றை அறிவதோடு, அவ்வகை இலக்கியங்களை எப்படி ஆய்வது என்றும் அறிந்து கொள்ளலாம். அந்தப் பாடல் இதுதான்.

"தேன்படிக்கும் அமுதாம்உன் திருப்
பாட்டைத் தினந்தோறும்
நான்படிக்கும் போதென்னை நானறி
யேன் நா ஒன்றோ
ஊன்படிக்கும் உளம்படிக்கும் உயிர்
படிக்கும் உயிர்க்குயுரும்
தான்படிக்கும் அனுபவங்கான் தனிக்
கருணைப் பெருந்தகையே"

திருவாசகத்தை அடிகளார் படித்த போது உற்ற அனுபவம் படிநிலைகளாகவும் முழுமையாகவும் இந்தப் பாடலின்கண் அமைந்து விளங்கக் காணலாம்.

படிநிலைகளாகக் காணும்போது நாநிலை, உடல்நிலை, உளநிலை, உயிர்நிலை, உயிர்க்குயிராம் ஆன்மநிலை எனும் ஐவகை நிலைகளை அறிய முடிகிறது. நாநிலை ஒலி நிலையாம்; செவி கேட்ப வாய்விட்டுப் பாடி அனுபவிக்கும் நிலை இது. உடல்நிலை என்பது எண் வகை மெய்ப்பாட்டு நிலையில் பாடலை அனுபவிப்பது. கண்காண எண்சுவை துய்ப்பில் மெய் அனுபவிக்கும் நிலையே இது. 'கண்ணும் செவியும் நுண்ணிதின் உணர்ந்தார்' எனும் தொல்காப்பிய இலக்கியத்திறன் கூறும் அடிப்படை நிலைகள் இவை இரண்டும் ஆகும்.

இவற்றை அடுத்தமையும் உளநிலை ஒலியால், காட்சியால், உற்ற அனுபவ உணர்வால் குழந்தை நெஞ்சம் அவற்றைக் கடந்து, மனநிலையில், அவற்றால் உருவாகிய ஆனால் அவற்றைக் கடந்த, ஓர் அனுபவத்தைத் துய்த்தவாறு இருத்தல்.

நான்காவது நிலையே உயிர்நிலை. இந்த நிலையில் பெறும் அனுபவம் யோக அனுபவம்; தன்னைத்தானே அனுபவிக்கும், தன்னில் தானேஅமிழ்ந்து போகும் அனுபவம். இங்கே செவிப் புலனுக்கு இடமில்லை. காட்சிகளையும் கடந்தது இது. மனம் இறந்த நிலையில் பெறுவது இது. இங்கே 'நான்' மட்டுமே இருந்து அனுபவிக்கும்.

இதனையும் கடந்த இறுதி அனுபவமே 'உயிர்க்குயிராம்தான்' படிக்கும் அனுபவம். ஐம்புலன்கள் அவிழ, மனம் மறைய நான் என்னும் உணர்வும் கரைந்து போக தான் அதாவது இறைவன்தான் மட்டும் நிற்கும் அனுபவம் இது. கடலில் உப்புபோல், காற்றில் கற்பூரம் போல் கரைந்து போன அனுபவம் இது. இதுவே மெய்யுணர்வு (Mystical Experience) அனுபவம்.

பெரும்பாலும் தமிழ் பக்திச் சான்றோர் பாடல்களில் இந்த நிலைகள் ஐந்தும் இயைந்திருத்தலைக் காணலாம். எனினும் தெளிவிற்காக, பயிற்சிக்காக இந்த ஐவகை நிலைகளுக்கும் ஐந்து பாடல்களே எடுத்துக் காட்டலாம். அவை அந்தந்த படிநிலைகளுக்கு மிகப்பொருந்தி நின்று உரிய அனுபவத்தைச் சிறக்கத் தருவன.

நாநிலை :

தமிழ்ப் பக்திப் பாடல் பண்சுமந்த பாடல்கள்; உரிய பண்ணினை உணர்ந்து பாடினால் அதன் பயனை முழுமையாகப் பெறமுடியும். மேலும் அவை எதுகை மோனை முதலிய தொடை நயம் உடையன. அத்தகு தொடைகளைத் தொடர்ந்து ஒலிப்பதால் அப்பாடலின் உயிரன்ன ஓர் உணர்வு நம்முள் உறையக் காணலாம். அன்றியும் அவை கூடிப் பாடுதற்கு உரியன. கூட்டுப் பாடல் வழி சிந்தை செவிவழி நின்று ஒன்றக் காணலாம். இவ்வாறு 'நாநிலை'யில் அனுபவிப்பதற்குரிய பாடல் பல.

'பதியுண்டு நிதியுண்டு புத்திரர்கள்
மித்திரர்கள்
பக்கமுண் டெக்காலமும்
பவிசுண்டு தவிசுண்டு திட்டாந்த மாக
யம
படர்எனும் திமிரம் அணுகாக்

# அட்ட வீரட்டம்

சிவபெருமான் செய்த எட்டு வீரச் செயல்களை 'அட்ட வீரட்டம்' என வழங்குகின்றனர். அவைகள் பிரமன் தலை கொய்தல், அந்தகனை அழித்தல், திரிபுரம் எரித்தல், தக்கன் தலை தடிந்தமை, சலந்தரன் வதம், கயாசுரன் சங்காரம், காமன் தகனம், காலனை உதைத்தமை என்பனவாகும்.

மேற்கூறிய எட்டு வீரச் செயல்களும் நடைபெற்ற திருத்தலங்களை 'அட்ட வீரட்டத் தலங்கள்' என அழைக்கின்றனர். அவைகள் திருக்கண்டியூர், திருக்கோவலூர், திருவதிகை, திருப்பறியலூர், திருவிற்குடி, திருவழுவூர், திருக்குறுக்கை, திருக்கடவூர் என்பனவாகும்.

இந்தத் திருத்தலங்களில் எழுந்துள்ள இறைவனை வழிபட்டால் பிணிகள் யாவும் நீங்கப் பெற்று எல்லாவித இன்பங்களும் அடையலாம் என்று கூறுவர்.

—முடிவை முத்து.

கதிஉண்டு ஞானமாம் கதிர்உண்டு
சதிர்உண்டு
காயசித்திகளும் உண்டு
கறையுண்ட கண்டர்பால் அம்மை
நின்தாளில்
கருத்தொன்றும் உண்டாகுமேல்'

என்னும் தாயுமானவர் பாடலும் அத்தகைய ஒன்றே. இதைப் பாடப் பாட உள்ளத்தில் 'உண்டு' என்னும் ஓர் அனுபவம் உறையக் காணலாம்.

ஊன்நிலை :

மணிவாசகரின்,

'மெய்தா னரும்பி விதிர்விதிர்த்
துன்விரை யார்கழற்கென்
கைதான் றலை வைத்துக் கண்ணீர்
ததும்பி வெதும்பியுள்ளம்
பொய்தான் தவிர்ந்துன்னைப் போற்றிச்
சயசய போற்றி யென்னுங்
கைதா னெகிழ விடேனுடை
யாயென்னைக் கண்டுகொள்ளே'

என்னும் பாடல் ஊன் அனுபவித்திற்கு உகந்த பாடல்.

உளநிலை :

குமரகுருபரர் தம் மீனாட்சியம்மைப் பிள்ளைத் தமிழில் பாடியுள்ள வருகைப் பருவப் பாடல் அனைத்தும் கற்பனை மிக்கன. உளக்காட்சிகள் பலவற்றுக்கு அழைத்துச் செல்வன.

"தொடுக்கும் கடவுட் பழம்பாடற்
றொடையின் பயனே! நறைபழுத்த
துறைத்தீந் தமிழின் ஒழுகுநறும்
சுவையே! யகந்தைக் கிழங்கை
யகழ்ந்த
தெடுக்குந் தொழும்ப ருளக் கோயிற்
கேற்றும் விளக்கே! வளர்சிமய
இமயப் பொருப்பில் விளையாடும்
இளமென் பிடியே யெறிதரங்கம்
உடுக்கும் புவனங் கடந்துநின்ற
ஒருவன் திருவுள் ளத்திலழ
கொழுக எழுதிப் பார்த்திருக்கும்
உயிரோ வியமே..."

உளநிலைப் படிப்பிற்கு உயர்ந்ததோர் பாடல்; கற்பனைக் காட்சி மீதூர்ந்த பாடல் இது.

ஓவியம், உயிர் ஓவியம், எழுதிப் பார்க்கும் ஓவியம், எழுதிப் பார்த்துக் கொண்டே யிருக்கும் ஓவியம், உள்ளத்து ஓவியம், ஒருவன் உள்ளத்து ஓவியம், ஒருவன் திருஉள்ளத்து ஓவியம், நின்ற ஒருவன் உள்ளத்து ஓவியம், புவனம் கடந்து நின்ற ஒருவன் ஓவியம், எறிதரங்கம் உடுக்கும் புவனம் கடந்து நின்ற ஒருவன் திருஉள்ளத்து ஓவியம் என அடுக்கிக் கொண்டே சென்று படிப்படியாக மண்ணிலிருந்து விண்வரை தூக்கிச் செல்லும் தூக்கிக் கற்பனை (Lofty imagination) கொண்டது இந்தப் பாடல்.

உயிர்க்குயிராம் அமைந்த நிலை :

உயிர் தன்னையிழந்து பெறும் இந்த நிலை அனுபவம் கடந்த அனுபவ நிலை. இதற்கமைந்த பாடல் இதுதான்.

"முன்ன மவனுடைய நாமங் கேட்டாள்
மூர்த்தி அவனிருக்கும் வண்ணங்
கேட்டாள்
பின்னை அவனுடைய யாரூர் கேட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சி
யானாள்
அன்னையையும் அத்தனையும் அன்றே
நீத்தாள்
அகன்று ளகலிடத்தார்
ஆசராத்தைத்
தன்னை மறந்தாள் தன்நாமங்
கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன்
தாளே!

கேட்டல், காண்டல், ஆதல், தன்னை மறத்தல், தன்னைக் கடத்தல், தானற்று தாடலைபோல் திருவடியில் ஒன்னுதல் ஆகிய மெய்யுணர்வு நிலை, உயிர்க்குயிராம் நிலை இந்தப்பாடலில் உணர்த்தப் பெறக் காணலாம்.

இந்தப் பாடலை நாநிலையிலும் பாடலாம்; ஊன் நிலையிலும் உற்றுணரலாம், உளநிலையிலும் கருதிக் காணலாம்; உயிர்நிலையிலும் அனுபவிக்கலாம்.

இவ்வாறு இராமலிங்க அடிகளார் பெற்ற ஐவகை அனுபவ நிலைகளையும் பக்தி இலக்கிய ஆய்வின் ஐந்து இயல்களாகக் கொண்டு ஆராய்ச்சிக்கும் பயன்படுத்தலாம்.

# குலசேகர ஆழ்வார் திருவுள்ளம்

முன்னுரை :

பாற்கடலில் துயின்ற பரந்தாமனைப் பாடிப் பணிந்தோர் பன்னிருவர் ஆவர். அவர்கள் பணி மிகவும் திவ்யமானதாகலும், இறைவனது திவ்யமான புகழைப் பேசுதலாலும் பாடல் தொகுப்புகள் நாலாயிரமும் திவ்யப்பிரபந்தம் எனப்பட்டன. நாலாயிர திவ்யப் பிரபந்தங்களைப் பாடியோர் பன்னிருவருள் பிரபந்த முறைப்படிக் குலசேகராழ்வார் மூன்றாவது ஆழ்வாராக வைக்கப்பட்டுள்ளார். குலசேகராழ்வார் பாடிய பாடல்கள் நூற்றைந்தாகும். அவரது பாடல்கள் இறை நெறிக்கு நம்மையெல்லாம் இட்டுச் செல்லும் வல்லமையுடையன எனலாம். இக்கட்டுரையில் ''குலசேகராழ்வார் திருவுள்ளம்'' என்பது பற்றிக் காண்போம்.

குலசேகராழ்வார் :

''திருமாலின் திருச்சின்னங்களே ஆழ்வார்களாகத் தோன்றினர்'' எனச் சான்றோர் கூறுவர். அம்முறையில் கௌத்துவமணியின் அம்சமாகத் தோன்றியவர் குலசேகராழ்வார் ஆவர். இவர் சேரர் குலத்தில் தோன்றி அரசு புரிந்தோர் ஆவர். திருமால் பக்தியில் ஊறித்திளைத்தமையால் முடிசூடி வாழ்வதினும் திருமால் அடி சூடி வாழ்வதையே பெரும்பேறாகக் கருதினர். பக்திக்குத் தேவையான நிலையாமை உணர்வு, மூவாசையின்மை, இறை நம்பிக்கை, பிறப்புண்மையுணர்வு, இருவினை உணர்வு ஆகிய நல்லியல்புகளே இறைவனிடம் இட்டுச் செல்வன என்ற பேரியல்பு இவரது கருவிலே திருவாகிக் கனிந்த ஒன்றாகும்.

உலகியல் உணர்வு :

உலகியல்பினை ஐயமறத் தெளிந்தோரே ஆன்மீக உணர்வினை அடைய முடியும். அந்நிலையில் குலசேகர ஆழ்வார் மேலாம்நிலை பெற்றிருந்தார். எனவே இவ்வுலக வாழ்க்கை நிலையாமைப் பற்றிய தெளிந்த சிந்தனை அவரது பாடல்களில் வெளிப்படக் காண்கிறோம்.

''மெய்யில் வாழ்க்கையை மெய்
யெனக் கொள்ளும் இவ்வையம்''

எனத் தெளிந்த ஆழ்வார் உலகியல்பின் நீங்கி ஐயன் அரங்கனிடம் ஆறாக் காதல் கொண்டார். உலகியல்பை மேலும் மேலும் கண்டு தெளிந்தார். ஆதலின்,

'' நூலின் நேர் இடையார் திறத்தே
நிற்கும் ஞாலம் ''

என்று உலகியலார் மாட்டுக் காணப்பெறும் தையலார் மேலுற்றச் மையலைச் சாடுகின்றார். உலகியலை நினைக்கும் தோறும் ஆழ்வார் உள்ளம் பதறுகின்றார். எனவே, அரங்கா! என்னிடத்து நின்பாற் கொண்டுள்ள பக்தி நிலையே ஓங்க வேண்டும்; உலகியல் நிலையினர் கொண்டுள்ள மாதரார் மையல் என்பால் வரலாகாது' என்று வேண்டுகின்றார்.

இவ்விடத்தே ஆழ்வார் நமக்கு அறிவுறுத்தும் நுட்பம் ஒன்றுண்டு. யாரொருவர் இறைவனிடம் மிகுந்த பக்தி கொள்கின்றாரோ, அவர் மாட்டு இத்தகைய ஆசைகள் எழாது எனவும் தெளியலாம்.

இறைவனிடம் பேரன்பும் பக்தியும் கொண்டோர்பால் மன்மதன் தனது கரும்பு வில்லை வளைத்து மலரம்பு தொடுக்கமாட்டான். அந்த நம்பிக்கை ஆழ்வார் உள்ளத்தில் அசைக்க முடியாத் திறமுடையதாகும். இறையுணர்வு இல்லாத உலகியல் மனிதர்கள் மன்மதன் கொடுஞ்சிலைக்கு ஆளாகிப் பெருந்துன்பம் எய்துவர். இதனை ஆழ்வார்,

''மாரனார் வெஞ்சிலைக்கு ஆட்செய்யும்
பாரினர்''

எனச்சாடுகின்றார். மன்மதனது மலரம்பிற்குத் தோற்று அடிமைகளாய் அல்லல் உழக்கும் மனிதர்களைப்போல் வாழும் இவ்வுலக வாழ்க்கை ஆழ்வாருக்குப் பிடிக்கவில்லை. எனவே அவரோடு கூடி வாழும் வாழ்க்கையை வெறுக்கின்றார். இவ்வகையில் ஆழ்வார் கொண்ட வெறுப்பு இறைவனிடம் கொண்ட பெருவிருப்பாகவும், பித்துற்ற நிலையாகவும் மாறுகின்றது. நரகத்தில் வீழாது காக்கும் நாராயணன்பால் பக்தி வெள்ளம் பெருக்கெடுக்கிறது.

உலகியலை நன்கு தெளிந்த ஞானிகள் ''எல்லாம் யோசிக்கும் வேளையில் பசிதீர உண்பதும் உறங்குவதுமாய் முடியும்'' என அறுதியிட்டுக் கூறியுள்ளனர். ஆழ்வார் காட்சியிலும்,

''உண்டியே உடையே உகந்தோடும் இம்
மண்டலம்''

எனும் உலகியல் காட்சி விரிகின்றது. இராமலிங்க சுவாமிகள்

''சோற்றாசையொடு காமச் சேற்றாசைப்
படுவாரைக் கொல்லக் கூற்றாசைப்
படும்''

எனச் சான்றோர் கூறுவர் எனத் திருவருட்பாவில் சுட்டிக்காட்டியுள்ளார்.

உலக மக்கள் உணவையும், உடையையும் விரும்பி அவை கிடைத்தற்குரிய முயற்சியை உடையவர்களாகி இறைவனை மறந்து வாழ்கின்ற நிலை ஆழ்வாருக்குப் பெரும் வேதனை தரு

புலவர். ப. லீக்மார்த்தாண்டன்,
எம்,ஏ.பி.எட் (எம் பில்)
இராசபாளையம்.

கின்றது. எனவே அன்னுரோடு மேவுதலே விரும்பாத நிலே இறைவனேடு தனக்குள்ள நெருக்கத்தை மேலும் வலுப்படுத்துகிறது.

ஆழ்வார் இறை நெறி நிற்றலேயே தீதில்லாத நன்னெறி எனக் கருதினர். இறை நெறி நில்லாது உலகியலார் மேவும் நெறி அனைத்தும் தீநெறியாகக் கண்டார். காரணம் ஆசைப்பட்டு அதனுல் பெருந்துன்பத்திற்கு ஆளாகும் மாந்தர்களின் மன வேதனையை ஆழ்வார் அறிந்தவர். எனவே

''தீதில் நன்னெறி நிற்க அல்லாது
செய் நீதியார் ''

எனச் சுட்டுகின்ருர். இறை நெறிக்கண் நில்லாரோடு மேவுதல் தீ நெறி எனத் தெளிந்த நிலே ஆழ்வாரிடம் உண்டு.

உலகியலார் அனைவரும் இறை நெறியில் நின்றெழுகும் ஞானியரைப் பித்தன் என்று பழிப்பது அறியாமையின் விளைவாகும். இறைவனிடம் பெரும் பித்துற்ற ஆழ்வார் தன்னைப் பித்தன் என்று சொல்லிக் கொள்வது பக்தியின் "உன்மத்த நிலே"யைச் சுட்டுவதாகும்.

தாயுமான சுவாமிகள், "அடியவர்க்கு அடிமைப் பணி புரிந்தால் இறையனுபவம் சித்திக்கும்" என்ற அரிய கருத்தை

''அன்பர் பணி செய்ய எனே ஆளாக்கி
விட்டுவிட்டால்
இன்ப நிலே தானே வந்தெய்தும்
பராபரமே ''

எனப் பாடியுள்ளார். நமது ஆழ்வாரோ எம்பிரான் திருமாலிடத்துக் கொண்ட பக்தி எழு பிறப்பும் நீங்கா திருக்க நினைக்கின்ருர். திருநாவுக்கரசு சுவாமிகளும்,

''புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா
உன்னடி என் மனத்தே
வழுவாதிருக்க வரந்தர வேண்டும் ''

என்று கேட்பார்.

பக்தியில் திளேக்கும் நாட்டம் உடையோர் அனைவரும் பக்தி நாட்டம் உடையோர்பால் நட்பு கொண்டொழுக வேண்டும். அப்போது தான் பக்தியுணர்வு பெருகும்; பரமனருள் எளிதில் வந்தெய்தும். பக்தி நெறியில் நிற்போர் இறைவனுக்கு அடிமைப்பணி பூண்டோர் ஆவர். இறைவன் புகழைப் பாட, பேச, திருக்கோயில் மெழுகிட, பூத் தொடுக்க என்று இன்ன பல பணிகள் அடியார்கள் உவந்து செய்வனவாம். எனவே ஆழ்வார்,

''எம்பரத்தர் அல்லாரொடும் கூடலன்
உம்பர் வாழ்வை ஒன்ருகக் கரு
திலன்
தம்பிரான் அமரர்க்கு அரங்க நகர்
எம்பிரானுக்கு எழுமையும்
பித்தனே ''

எனப்பாடியுள்ளார்.

இறைப்பணி பூண்டொழுகும் அடியார்பால் மேவும் பெருவிருப்புடைய ஆழ்வார் தேவர்களின் செல்வமிக்க வாழ்வையும் துச்சமென நினைத்து வெறுக்கின்ருர். எம்பிரான் நாராயணனுக்குத் திருவடிச் சேவை செய்தலேக்காட்டிலும் பேரின்பம் வேறு இல்லே என்பதே ஆழ்வார் கொண்ட முடிவு.

இறை நெறி நிற்றல் என்பது எல்லோருக்கும் எளிதில் வாய்ப்பதன்று.

''தவமும் தவமுடையார்க் காகும்'' என்கிறது வள்ளுவம்.

''அவனன்றி அணுவும் அசையாது'' என்பது சான்ருேர் கண்ட நெறி. உலகியல் நிலே உணர்ந்து, மனத்தைத் தீய வழியில் செல்லவிடாது நன்னெறியாம் இறை நெறிக்கண் நிறுத்தற்குப் பெரிதும் முன் தவம் வேண்டற்பாலதாகும். ஆழ்வார் உள்ளம் பக்தியில் உருகும் நிலேயுற்றது. எனவே அவரது மனமும் இறையுணர்வில் ஒன்றுபட்டது. அதனை,

''எத்திறத்திலும் யாரொடும் கூடும்
அச்
சித்தந் தன்னைத் தவிர்த்தனன் ''

என்று கூறுவதால் அறியலாம்.

இறை நெறியில் ஈடுபடாது இன்னல் படும் மக்கள் அனைவரும் பேயரே என்கின்ருர். இறையருள் பெற இறை நெறியில் நிற்றல் வேண்டும். அவ்வாறு நிற்பவர் பெறும் பேறு அனந்தம். அதை விடுத்து உலகியிலிலேயே உழன்று, செத்துப் பிறக்கும் சிறு நெறி மேற்கொள்வாரைப் பேயர் என்று ஆழ்வார் திட்டுதலும் நம் மீது கொண்ட அன்பாலேயாம். ஆழ்வார் இறை நெறியில் நிற்றலேக் கண்ட உலகியலார், 'பேயர்' என எள்ளி நகையாடுதலேயும் நினைந்து பார்க்கின்ருர். எனவே

''பேயரே யெனக்கு யாவரும்; யானு
மோர்
பேயனே யெவர்க்கும் இது பேசி
யென்
'ஆயனே ! அரங்கா !' என்றழைக்
கின்றேன்
பேயனு யொழிந்தே னெம்பிரா
னுக்கே ''

எனக் கூறியுள்ளார்.

முடிவுரை :

ஆன்மீக ஞானியர் அனைவரும் இறை நெறி நிற்றலால் பேரின்பம் உற்றனர். எனவே உலகியலார் செல்லும் அவல வாழ்வை வெறுத்தனர். அவல வாழ்வு ஆசை வாழ்வாக, இறை நெறி மறந்த வாழ்வாக இருத்தலேக் கண்டு சாடினர். இறை நெறி நிற்போர் செயல் உலகியலாருக்கு அறிவற்றசெயலாகப்படுதலால் பேயர் என எள்ளி நகையாடுகின்றனர். இறை நெறி நிற்போர், உலகியலார் பிறவிப்பயனை எய்துவிக்கும் செயலே மறந்ததால் பேயர் எனச் சாடுகின்றனர். இறை நெறி நிற்போரை அன்றும் இன்றும் எள்ளி நகையாடும் போக்குக் காணப்படுகின்றது. எனவே இறை நெறியில் நிற்கும் மக்கள், அடியார் நிந்தனே செய்தலே விடுத்து, அடியார் சேவையிலும், இறை நெறியிலும் நின்று இறையருள் பெறுவாராக!

# தமிழ் நாட்டில் வைணவம் - தோற்றமும் வளர்ச்சியும்

வழிபாட்டு முறைகள் :

திருமாலுக்குத் திருமாலிருஞ் சோலைமலை இருந்தையூர், குளவாய் ஆகிய இடங்களில் கோயில்கள் இருந்ததைப் பற்றிப் பரிபாடல் சிறப்பாகப் பேசுகின்றது. இவை மூன்றும் பாண்டிய நாட்டில் இருந்த திருத்தலங்கள். திருவேங்கடமலை, திருவரங்கம், திருமாலிருஞ் சோலைமலை ஆகிய இடங்களில் திருமால் கோயில்களைப் பற்றியகுறிப்புகள் சிலப்பதிகாரத்தில் காணப்படுகின்றன.

திருமாலிருஞ்சோலைமலையைத் திருவரை இருங்குன்று, மாலிருங்குன்று எனப்பல பெயர்களால் பரிபாடல் குறிப்பிடுகிறது. அங்குப் பலகாரணி, சரவணம், இட்டசித்தி எனும் மூன்று பொய்கைகள் இருந்ததாகச் சிலப்பதிகாரம் சுட்டுகிறது.

மதுரைக்கு அருகில் இருந்த இருந்தையூரில் திருமால், இருந்த கோலத்தில் இருந்ததாகப் பரிபாடல் தெரிவிக்கின்றது. திருமால் இருந்த கோலத்தில் இருந்த இவ்வூருக்கு 'இருந்தையூர்' எனும் பெயர் வழங்கியதாக அறிகிறோம். இக்கோயிலைச் சூழ்ந்து சோலைகளும் இடையே பொய்கையும் இருந்தமை தெரிய வருகிறது.

குளவாய் (ஏரியின்) கீழ்ப் பகுதி எனும் ஊரும் மதுரைக்கு அருகில் இருந்ததாகத் தெரிகிறது. இதனை 'மாடக்குளக் கீழ் மதுரை' எனவும் அக்காலப் புலவர் சுட்டியுள்ளனர். இங்கு ஆதிசேடனுக்கும் தனிக் கோயில் இருந்ததாகப் பரிபாடல் அறிவிக்கிறது. (பரி. திர. 1:59) திருவனந்தபுரத்தில் இருந்த 'ஆடக மாடம்' ஒரு திருமால் கோயில் என்பதைச் சிலப்பதிகாரம் சுட்டுகிறது.

பெரும்பாணாற்றுப் படையில், கச்சியில் திருமால் பாம்பணையில் பள்ளி கொண்ட திருவெஃகாவைப் பற்றிய குறிப்பும் உள்ளது. (பெரும்பாண். 372-373) முருகனின் புகழ்பாடும் திருமுருகாற்றுப் படையில், 'புள்ளணி நீள்கொடிச் செல்வன்' (திருமுருகு. 151) என்று திருமால் சுட்டப்படுகிறார்.

காவிரிப்பூம்பட்டினத்தில் பல கோயில்கள் இருந்தன. பலராமரின் கோயில், 'வெள்ளை நாகர்கோட்டம்' எனும் பெயர் பெற்று இருந்தது.

திருமாலின் திருவடிகளில் மக்கள் வீழ்ந்து வணங்கினர். இறைவன் திருவடிகள் 'தாய்' போன்றது எனவும் (பதிற். 13.61) பிறவிப் பிணி அறுத்துப் பெரு வாழ்வு நல்கும் (பதிற். 3:2) எனவும் அக்கால மக்கள் நம்பினர். திருமாலைக் கண்டு வணங்குவதோடு அவருடைய திருவடிகளில் பக்தர்கள் தலையை வைத்து ஒற்றி எடுக்கும் வழக்கமும் இருந்ததைப் பார்க்கிறோம். (பதிற். 31:9; பரி. 1:65-68 2:77) இக்காலத்தில், திருமால் கோயில்களில் 'சடாரி' சார்த்துவது, இந்தப் பழக்கத்தில் இருந்து தோன்றியதாக இருத்தல் கூடும். திருமாலின் பரந்தமார்பு, 'திருவரைய கலம்' எனப் போற்றப்பட்டது. அதில் திருமகள் குடிகொண்டு இருந்தாள். அவளை வணங்குவதற்காகத் திருமாலின் மார்பு அருகில் தலை வைத்து வணங்கும் வழக்கம் அக்காலத்தில் இருந்தமை நம்மைவியப்பில் ஆழ்த்துகிறது. (பரி. 13:61:3:2) திருமாலை வணங்குவதால் பெறக் கூடிய திருவருளை மிகச் சிறப்பாகக் கருதினர். திருமாலிருஞ்சோலை மலையை வலம் வந்து, பக்தர்கள் வணங்கினுர்கள் எனக் கருத இரண்டோர் அடிகள் இடம் தருகின்றன. (கலி. 108:55-56; பரி. திர. 1:5-6).

தங்கள் உற்றார் உறவினர்களோடு கோயில்களுக்குச் சென்று மக்கள் வழிபாடு செய்தனர்; கோயிலுக்குள் நுழைவதற்கு முன், குளத்தில் கை கால்களைக் கழுவிக் கொண்டு சென்றனர் (பரி. 13:11 - 13 - 15:46). கோயில் உள்ளே நுழைந்ததும் திருமாலின் திருமுன்னர் கீழே விழுந்து அடியையும் முடியையும் நிலத்தில் பொருத்தி வணங்கும் வழக்கம் இருந்தது. (சிலப். 9:105; பரி. 1:65-68; 2:75) பின்னர், கோயிலை வலம் வந்து மீண்டும் இறைவன் திருமுன்னர் நின்று வேண்டுதல்களைக் கூறி வாயாரப் புகழ்ந்து, போற்றிப் பாடினர்; (சிலப். 6:57: மதுரை. 461-466; பரி. திர. 1:80-82) சிலர் நேர்த்திக் கடன்களைச் செலுத்தி, வீழ்ந்து வணங்கி, மனநிறைவோடும், புதிய

பேராசியர். க. த. திருநாவுக்கரசர்.
சென்னை.

ஊக்கத்தோடும் தங்கள் வீடுகளை நோக்கித் திரும்பிச் சென்றனர்; (பரி. 15:26) மகளிர், நல்ல ஆடைகள் உடுத்தி, அணிகலன்கள் அணிந்து, நறுமணப் பொருள்களால் ஒப்பனை செய்து கொண்டு கோயில்களுக்குத் தம் கணவன்மாரோடு சென்றனர்; அப்பொழுது பூசைக்குரிய பொருள்களாக நறுமணம் வாய்ந்த மலர்களையும் சந்தனம் போன்ற நறுமணக் குழைவுகளையும், தூப தீப ஆராதனைக்குரிய பொருள்களையும் பக்தர்கள் எடுத்துச் சென்றனர்; (பரி. 15:26) சமைக்கப்பட்ட பொங்கல் போன்ற பொருள்களையும் திருவமுதாக,

## திருமுறைகண்ட சோழன்

தேவாரம் பாடிய மூவர் பெரு மக்களும் தம் பாடல்களை எல்லாம் தில்லைவாழ் அந்தணர்களிடத்தில் ஒப்புவித்து மறைந்தனர். மாணிக்கவாசகர் திருவாசகம் பாட பாடல்களை இறைவனே ஏட்டில் எழுதி அவைகளை அவ்வந்தணர்களிடம் ஒப்படைத்தார். பின்னொரு நாளில் மேற்சொன்ன நால்வரின் பாடல்களின்மீது நாட்டம் கொண்ட தஞ்சை மன்னன் இராசராசன் தேவாரமும், திருவாசகமும் அந்தணர்களிடம் இருப்பதை அறிந்து அவைகளை அவர்களிடம் தன்னிடம் தர வேண்டினன். அவர்களோ அவ்வேடுகளை தங்களிடம் தந்து சென்ற அடியார்களே நேரில் வந்தால் நான் தருவோம் என்றனர். செய்வதறியாது திகைத்த சோழ மன்னன் சமயக்குரவர் நால்வரின் திருஉருவச் சிலைகளை அலங்கரித்து ஆட்கள்மூலம் சுமந்து அவர்கள் முன்பு கொண்டு வந்து நிறுத்தினன். அந்தணர்களும் நால்வரின் திருவுருவச் சிலைகளை நால்வராகவே கொண்டு மன்னனிடம் ஏடுகளைச் சேர்ப்பித்தனர். மன்னனும் ஏடுகளைத் தூய்மைப்படுத்தி, பூஜித்து நம்பியாண்டார் நம்பிகளைக்கொண்டு அவைகளைத் திருமுறைகளாக வெளியீடு செய்தான். மேலும் அந்தத் திருமுறைகளை ஓதுவார்களைக் கொண்டு, திருக்கோவில்களிலெல்லாம் பண்ணோடு ஓதுமாறு செய்தான். இதன் பொருட்டு இராசராச சோழன் 'திருமுறை கண்ட சோழன்' எனச் சிறப்பித்து அழைக்கப்பட்டான். நால்வர் தவிர சேந்தனர், திருமூலர், சேக்கிழார் மற்றும் பலரின் பாடல்களும் திருமுறையில் அடங்கும்.

—முடிவை முத்து.

கோயிலுக்கு மக்கள் எடுத்துச் சென்று படைத்து வழிபாடு செய்தனர்; (சிலப். 11:91-159) மன்மதன் கோயிலுக்குப் பாலினைக் கொண்டு சென்று படைத்தனர்; (சிலப். 11: 91-159) தலைக்கு மேல் இரு கைகளையும் கூப்பி, திருமாலை வணங்குதல் சிறப்பான பழக்கமாக இருந்தது; (சிலப். 11:41-46) திருவடிகளில் வீழ்ந்து வணங்கினர்; தங்களுக்குத் துன்பம் வராமல் காக்குமாறும், நோய்நொடி நீங்குமாறும் வளமான வாழ்க்கையை அருளுமாறும், மன நிறைவு தருமாறும் இறைவனை வேண்டி, நேர்ந்து கொண்டனர். (பதிற். 31:9 சிலப். 12:35-40) இசையும், பாட்டும், கூத்தும் வழிபாட்டில் இடம் பெற்றன.

சங்க காலத் திருக்கோயில் வழிபாட்டில், மக்கள் நேராக இறைவன் அருகில் சென்று, தாங்களே படையல் போட்டு, தூப தீப வழிபாடு செய்து வணங்கினர். இறைவன் திருமேனிக்கும் பக்தர்களுக்கும் இடையே, பூசாரிகள் இருந்தமைக்குரிய சான்றுகளே இல்லை.

### துறவிகள் :

சங்க காலத்தில், 'முக்கோல் பகவர்' எனும் ஒரு வகைத் துறவிகள் சுட்டப்படுகின்றனர். (சிலப். 30:52; 26:63) முக்கோலை வடமொழியில் 'திரிதண்டம்' எனச்சுட்டுவர். 'பகவர்' எனும் சொல், 'பாகவதர்' எனும் சொல்லின் திரிபாக இருத்தல் கூடும். பிற்கால வைணவ சம்பிரதாயத்தில் திரிதண்டிகளை வைணவத் துறைவிகள் எனவும், ஏகதண்டிகளை அத்வைத சார்புடைய துறவிகள் எனவும் கூறுவர். இந்தப் பின்னணியில் நோக்கினால், சங்க கால முக்கோல் பகவர் வைணவத் துறவிகளாகத் தோன்றுகின்றனர்.

### விழாக்களும் நோன்பும் :

வேங்கடத்தை 'விழா அறாத (நீங்காத) வேங்கடம்' என்ற பண்டைத் தமிழ்ச் சான்றோர் சுட்டியுள்ளனர். சங்க காலத்தில் கோயில்களில் விழாக்கள் நடைபெற்றதைப் பற்றிய செய்திகள் பரிபாடலில் நிறைய உள்ளன; இதைப் போன்றே சிறப்புமிகு நோன்பான தைந்நீராடலை (இக்கால மார்கழி நோன்பினை)ப் பற்றிய விளக்கமும் இடம் பெற்றுள்ளது.

திருமாலின் பிறந்த நட்சத்திரமாகிய திருவோணத்து அன்று, தமிழ் மக்கள் சிறப்பாகத் திருவோணத் திருவிழாவினைக் கொண்டாடினர். இக்காலத்தில், கேரள மக்கள் இதனை ஓணம் பண்டிகையாகக் கொண்டாடுகின்றனர். (கலி. 9, மதுரைக்-591)

மார்கழி-தை மாதத் தொடக்கத்தில் கன்னிப் பெண்கள் பாவை நோன்பு நோற்று, அம்பிகையை வழிபட்டனர். நோன்பின் முடிவு தை மாத முதல் நாளாகும் (இன்றைய பொங்கல்). அன்று மகளிர் கூட்டம் கூட்டமாகச் சென்று ஆறுகளில் நீராடினர். கரையிலேயே தேவியைப் பூசை செய்து வழிபட்டனர். (நற். 86:7-9) இந்த நோன்பின் வழியிலே வந்ததுதான் மார்கழி நோன்பு. ஆண்டாளுடைய திருப்பாவையும், மாணிக்க வாசகரின் திருவெம்பாவையும் இந்த நோன்பினைச் சிறப்பித்துப் பிற்காலத்தில் பாடப்பட்ட பாசுரங்களாகும்.

பங்குனி மாதத்தில் நடைபெற்ற 'பங்குனி விழா'வும் உறையூரில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. (நற். 234:8) காவிரிக்குச் சென்று நீராடி, திருவரங்கத் திருமாலை வழிபட்டனர். மதுரையில் பங்குனி மாதத்தில் வேனில் (வசந்த)விழா கொண்டாடப்பட்டது. இதை ஒட்டி, 'விருந்து' ஒன்று நடைபெற்றது. அதனை'வேனில்

விருந்து' என்று போற்றினர் (அகநா. 137; கலி. 101) வேனில் விழா, திருமாலின் மகனான காமனுக்கு எடுக்கப் பட்ட விழாவாகத் தெரிகிறது.

**கலையும் வாழ்வும் :**

இசை, நாட்டியம், கூத்து ஆகியவை திருமால் 'வழிபாட்டோடு சேர்த்து வளர்க்கப்பட்டன. திருமாலையும் பிற கடவுளரையும் போற்றிப் பாடப்பட்ட பரிபாடல்கள் 'தேவ' பாணியில் (பிற்கால தேவாரப்பாடல்) அமைந்தன. பரிபாடல் ஒவ்வொன்றுக்கும், 'பண்' வகுக்கப்பட்டுள்ளது. இதனால் தெய்வங்களைப் பற்றிய பாடல்கள் 'துதிப்பாடல்களாக' மக்களால் பாடப்பட்டு இருக்கலாம். பரிபாடல் பாடிய புலவர்கள் 'பக்திப் பாடல்களைப்' பாடி, ஆழ்வார்களுக்கும் நாயன்மார்களுக்கும் முன்னோடிகளாக விளங்குகின்றனர். (கலி. 92: 68) திருமால் ஆடிய அல்லியம், மல்லின் ஆடல், குடக்கூத்துப் போன்றவை அக்கால விழாக்களில் ஆடப்பட்டு இருக்க வேண்டும். இவற்றையும் இன்னும் பலவற்றையும் இந்திர விழாவில் மாதவி ஆடியதைச் சிலப்பதிகாரம் தெரிவிக்கிறது. 'குரவைக் கூத்து' திருமால் வழிபாட்டோடு தொடர்பு உடையது என்பதை முன்னரே கண்டோம்.

கோயில் கட்டடக்கலை எவ்வாறு வளர்ச்சியுற்று இருந்தது என்பதை முழுமையாக அறிய இயலவில்லை. சுடுமண்ணால் (செங்கற்களால்) கோயில்கள் அமைக்கப்பட்டு இருந்தது. அவற்றில் மரக்கட்டைகள் கூரைகளைத் தாங்கின. அவற்றில் பெரிதும் மாடக்குழிகள் இருந்தன. அவையே கருவறைகளாகப் பயன்படுத்தப்பட்டன. கோயில் சுவர்களில் வண்ண வண்ண ஓவியங்கள் வரையப்பட்டு இருந்தன.

பரிபாடலில், திருமாலின் தோற்றப் பொலிவை வருணிக்கும் பாடல்களில் இருந்து, திருமாலின் மூல விக்கிரகம் (கற்சிலை) நுட்பமாகவும், வடிவாகவும் செய்யப்பட்டு இருக்க வேண்டும் எனத் தோன்றுகிறது.

சிலப்பதிகாரத்தில் காணப்படும் திருமாலின் கிடந்த கோலமும், நின்ற கோலமும் இன்றைக்குத் திருவரங்கத்திலும், திருப்பதியிலும் காணும் மூர்த்திகளின் அமைப்பையும் அழகையும் பிரதிபலிப்பனவாக உள்ளன. இவற்றால், அக்காலத்தில் சிற்பக்கலை நன்கு வளர்ச்சியுற்ற நிலையை அடைந்து இருந்தமை புலனாகிறது.

காமவேளின் சிலையை 'மதனப் பாவை' என்று சுட்டினர். 'பாவை' என்பதற்குச் சுதை வடிவம் என்பது பொருள். எனவே, காமனைச் சுதையாலான சிலை வடிவில் வழிபட்டமை தெரிகிறது.

கபிலர் தீட்டியுள்ள 'கஜ இலக்குமியின்' சொல்லோவியம், ஏறக்குறைய இக்காலச் சிற்ப அமைப்பையே ஒத்து இருக்கிறது. (பரி. 19:45-43; மதுரைக் காஞ்சி 593) பண்டைத் தமிழரின் அழகுணர்வையும் கலைக் கொள்கையையும் திருமால் வழிபாட்டின் வாயிலாக புரிந்து கொள்ள இயலுகிறது.

**பக்தி நெறியும் பழந்தமிழ்ப் பாடல்களும் :**

சங்கப் பாடல்களில் வைணவ சமய (தத்துவத் திரையை)க் கோட்பாட்டின் அடிப்படையான 'முப்பொருள்' உண்மையைப் பற்றிய செய்திகளே காணப் பெறவில்லை. இதனால் முறைப்படுத்தப்பட்ட தத்துவச் சிந்தனை வளர்ச்சியுறாத காலத்திய திருமால் வழிபாட்டு நெறிகளையே சங்க கால மக்கள் போற்றிப் பின்பற்றினர் எனலாம்.

தமிழ் நாட்டின் பிற்காலத்தில் இருவகைச் சமயங்களுக்கும் அடிப்படைக் கோட்பாடான, 'அடிசேர்தல்' (பிரபத்தி) பற்றி தெளிவான குறிப்புகள் அவற்றில் கிடைக்கவில்லை. திருமாலின் திருவடிகளை வணங்கினர்; 'முடியினைத் திருவடிகளை ஒற்றி எடுத்தனர்' என்னும் செய்தி 'திருவடி சேர்தலுக்கு' முன்னோடியாக அமையலாம். இறைவன் திருவடிகளை அடைக்கலம் அடைதலைப்பற்றித் திருவள்ளுவரே அழுத்தம் திருத்தமாக முதன் முதலில் எடுத்துரைத்துள்ளார்.

இரண்டாவது பரிபாடலின் தொடக்கத்தில், 'உலகத்தின் தோற்றம்' பழங்கதைப் பான்மையில் வருணிக்கப்பட்டுள்ளது. மற்றும், மூன்றாம் பாடலில் (பரி. 3:17-80)

"பழஎன, கால்என, பாருஎன,ஒன்று என
இரண்டு என மூன்றென, நான்குஎன, ஐந்துஎன,
ஆறுஎன, ஏழுஎன, எட்டுஎன, தொண்டுஎன
நால்வகை ஊழி"

என்னும் பாடற் பகுதியில், சாங்கிய தத்துவக் கருத்து இடம் பெற்று இருப்பதைப் பாடலின் உரையாசிரியரான பரிமேலழகர் விளக்கியுள்ளார்.

சங்க காலத் தமிழகத்து அருளாளர்களும் அறிஞர்களும் கண்ணனையே, திருமாலாகக் கருதிப் பரம்பொருள் கோட்பாட்டை உருவாக்கியுள்ளதை முன்னமே கண்டோம். இந்த எண்ணப் போக்கு அவர்களிடம் ஆழ வேரூன்றி ஒன்றாகக் காணப்படுகிறது. இதற்குக் காரணம் யாது?

பகவத் கீதையில், கண்ண பரமாத்மா திருவாய் மலர்ந்து அருளியுள்ள "பெரிய பரப்பிரம்மமே எனக்காதாரம். அதில் நான் கருத்தரிக்கின்றேன். பாரதா! எல்லா உயிர்களும் அதிலேதான் பிறக்கின்றன. எல்லாக் கருக்களிலும் பிறக்கும் வடிவங்கள் அனைத்திற்கும் பிரம்மமே பெரிய காரணம். நான் விடை தரும் பிதா" (பகவத் கீதை, பாரதியார் மொழி பெயர்ப்பு 14:1-2) எனும் சுலோகங்களில் காணப்படும் பரத்துவ - முழுமுதல் கொள்கை, தமிழ் நாட்டு மக்களுக்கு நன்கு அறிமுக

மாகியிருத்தல் கூடும். பகவத் கீதை யின் செல்வாக்கினுல் பண்டைத் தமி ழரிடையே இத்தகைய எண்ணப் போக்கு உருவாகி இருக்கலாம்.

பக்தி நெறியின் கரு, முதற் பரி பாடலில் பரவலாகக் காணப்படு கிறது. சமயச் சார்பற்ற உணர் வோடு, உலகியலில் பேரீடுபாடு கொண்டு பண்டைக் காலத் தமிழர் கள் வாழ்ந்தார்கள். அவர்களுடைய மனப்போக்கை மாற்றும் வகையில், உலகில் என்றும் நிலைபேறுடைய பயன் மதிப்புகளில் முதன்மையான சமய உணர்வினைச் சில புலவர்கள் பெற்று இருந்தமை, வியப்பூட்டு கிறது. ஆனுல், இந்த நிலை எண்ணற்ற போர்களினுல் உண்டான துன்பங்களை அனுபவித்ததனுல் தோன்றிய மாற்ற மாகும். இத்தகைய நிலை சங்க காலத் தில் கடைப்பகுதியில்தான் உருவாகி இருக்க வேண்டும். புறச் சமயங் களான பௌத்த, சமண சமயங் களால் பெருகி வந்த ஆதிக்க வெறி இதற்குப் புறத்தூண்டுதலாக அமைந்து இருக்கலாம்.

காதலாகிக் கசிந்து உருகி, இறை வனிடம் திருவருளை வேண்டி வணங் கும் அருளாளர் நிலையினைச் சில புலவர் களாகிலும், அக்காலத்தில் அடைந் துள்ளனர். அவர்கள், 'இசையோடு தமிழ்ப்பாடல்' சில பாடியுள்ளனர். அவற்றை ஓதுகின்றவர்கள் உள்ளம் நெகிழ்ந்துருகி, கண்ணீர்மல்கி, இறை அனுபவப் பேற்றையும் பெறக் கூடி யனவாக அவற்றின் சில பகுதிகள் அமைந்துள்ளன.

"சுவைமை, இசைமை, தோற்றம், நாற்றம், ஊறு
அவையும் நீயே! அடுபோர் அண்ணல்!
அவைஅவை கொள்ளும் கருவியும் நீயே!
முந்து யாம் கூறிய ஐந்தனுள்ளும்
ஒன்றலில் போற்றிய விசும்பும் நீயே!
இரண்டின் உணரும் விளியும் நீயே!
மூன்றின் உணரும் தீயும் நீயே!
நான்கின் உணரும் நீரும் நீயே!
ஐந்துடன் முற்றிய நிலனும் நீயே!
அதனுல், நின்மருங்கின்று மூவேழ் உலகமும்!

(பரி. 13:13-23)

என்பன போன்ற பாடல்கள் திரு மாலின் முழுமுதல் தன்மையை எடுத் துரைப்பதோடு அடியார் ஒருவர் ஆண்டவனிடம் கொண்ட பக்தி பர வசத்தையும் புலப்படுகின்றன.

சிலப்பதிகாரத்தில் ஆய்ச்சியர் குர வையை நிறைவு செய்யும் 'முன்னிலைப் பரவல்', 'படர்க்கைப் பரவல்' எனும் பகுதிகளில் அமைந்துள்ள பாடல்கள் யாவுமே பக்திச்சுவை நனிசொட்டச் சொட்டப் பாடப்பட்டனவாக உள்ளன.

"சேகவன்சீர் கேளாத செவியென்ன செவியே?
திருமால்சீர் கேளாத செவியென்ன செவியே?"

எனும் பாடலும்,

"கரியவனைக் காணுத கண்ணென்ன கண்ணே?
கண்ணிமைத்துக் காண்பார்தம் கண் ணென்ன கண்ணே?"

எனும் பாடலும்,

"......பஞ்சவர்க்கு தூது
நடந்தானை ஏத்தாத நாவென்ன நாவே?
நாராயணுவென்னுத நாவென்ன நாவே?"

எனும் பாடலும், ஆழ்வார் பாசுரங் களில் பொங்கி வழியும் பக்தி வெள் ளத்திற்கு முன்னேடி என்றே துணியலாம். வேதங்களில் காணப் படும் திருமாலின் துதிப்பாடல்களை அடுத்துத் தமிழ் மொழி ஒன்றிலேயே பக்திப்பாசுரங்கள் பரிபாடல் வடிவில் வெளிப்படுத்தப்பட்டுள்ளன. பிற இந்திய மொழிகளில் கி. பி. பத்தாம் நூற்றுண்டை ஒட்டியே இத்தகைய பக்திப் பாடல்கள் தோன்றியுள்ளன.

பிற்காலத்திய பக்தி இயக்கத்திற்கு வித்திட்டவர்கள் சங்க காலச் சான் ரேர்களே எனக் கூறினுல், அது மிகை யாகாது.

ஆகவே, தமிழ்நாட்டில் வைணவத் தின் தோற்றமே பெருஞ்சிறப்புடைய தாகும். பிற்காலச் சிந்தனைகளில் பா வும் ஊடுமான இழைகளில் பல, பண் டைக் காலப் புலவர்களால் நூற்கப் பட்டுள்ளன. அவற்றிற்கு வண்ணம் ஊட்டியும், முறுக்கேற்றியும், பொலிவு பெறச் செய்தும், உலகம் போற்றும் அரும் பாசுரங்களை ஆழ் வார்கள் அருளிச் செய்தனர் எனக் கூறலாம்.

**2. வைணவ சமயத்தின் வளர்ச்சி :**

கி. பி. ஐந்தாம் நூற்றுண்டு முதல் ஒன்பதாம் நூற்றுண்டு முடிய தமிழ கத்தில் பக்தி வெள்ளம் பெருக் கெடுத்து ஓடியது. ஆழ்வார்களும் நாயன்மார்களும் சமயப்பணி ஆற் றியக் காலமது. அக்காலத்தில் பல் லவ-பாண்டிய அரசர்கள் தமிழ் நாட்டை ஆண்டனர். அவர்களுடைய ஆதரவும் போற்றுதலும் இச்சமய எழுச்சிக்கு ஓர் உந்துதல் சக்தியாக அமைந்தன.

திருமாலின் அடியவர்கள், ஊர் ஊராகச் சென்று திருமால் கோயில் கொண்டுள்ள திருத்தலங்களைக் கண் டனர்; வணங்கினர்; இறைவனின் திருவருட் பேற்றின் மாட்சியைப் போற்றிப் பாடினர். இந்தகைய திரு மால் அடியார்களை ஆழ்வார்கள் எனும் பெயரால் சுட்டினர்.

"ஆசைப் பட்டு ஆழ்வார் பலர்"

(நா. திவி. 2395)

எனும் அடியில் காணப்படும் சொல் லாட்சியால், இறைவனுடைய திரு வருள் பேற்றில் மூழ்கித் திளைத்த பெரியார்களே 'ஆழ்வார்கள்' எனப் பிற்காலத்து மக்களால் போற்றப் பட்டனர்.

(தொடரும்)

# தனிப் பெருந்தலைவனான தயாநிதி



ஒவ்வொரு வீட்டிற்கும் தலைவனென ஒருவன் உண்டு. அதேபோல ஒவ்வொரு நாடும் கூட தலைமகன் ஒருவனைக் கொண்டிலங்கக் காண்கிறோம். அவ்வாறே இவ்வையத்தைத் தோற்றுவித்து வாழவைப்பானாகிய தனிப்பெருந் தலைவனொருவன் இருக்க வேண்டுமல்லவா! அவனே இறைவன் எனப்படுபவன். நாம் எளிதில் புரிந்துகொள்வதற்காக வேண்டுமானால் அவனை மற்றத் தலைவர்களோடு ஒப்பிட்டுப் பேசலாம். என்றாலும், இவ்வாறு 'ஒப்பிட்டு பேசுவதேகூட தவறோ?' எனவும் நினைக்கத் தோன்றுகிறது. ஏனென்றால் இறைவனுக்கும், இவ்வையகத்தில் நாம் காணலாகும் தலைவர்களுக்கும் எந்தவிதத்திலும் ஒப்பென்பது உண்மையில் இருக்கமுடியாது. அவன ஒப்பாரும், மிக்காரும் இல்லாத உயர் தனித்தலைவன். அவன் யார், எவ்வண்ணத்தவன், எப்படியன் என்று யாராலும் கூறிவிட முடியாது. இருந்தாலும் நம் அறிஞர்களும், முனிவர்களும், யோகிகளும், சிறந்த சான்றோர்களும் தம்முடைய பல நாட்பட்ட தவ வலிமையால் அவனது இருப்பையும் 'அவனை அடைவதே ஆன்மாவைப் பெற்ற அனைவரது ஈடேற்றத்திற்கான வழியாம்' என்பதையும் கண்டுணர்ந்துக் கூறியுள்ளனர்.

இறைவனோடு இம்மண்ணுலகத் தலைவர்களை ஒப்பிட்டுப்பேசுவதானது மலையையும் மடுவையும்—இல்லையில்லை—நம்மால் கற்பனையிலும் காண்பதற்கரிய உயரமும், பருமனும் கொண்ட பெருமலையோடு சின்னஞ்சிறியதான மடுவொன்றின் சிறியதிற்கும் சிறியதான சிற்றணுவின் மிகமிகச் சிறிய கூறொன்றினை ஒப்பிட்டுப் பேசுவதாகவே முடியும். இதுவும் ஒருவாறாகக் கூறி முடிப்பதாகவே அமையும்.

இனி, ஒப்புமை கண்டு பேசுவதை விடுத்து நம் உயரிய சமயச் சான்றோர் வழி நின்று சிந்திப்போமேயானால் அவனைப்பற்றிய தெளிவு நமக்குத் தோன்றக்கூடும். அவ்வாறு சிந்திக்கிறபோதும் சைவ சித்தாந்தம் வைணவ சிந்தாந்தம் என்று பற்பல சித்தாந்தங்கள் நம்முன் விளக்கங்கள் கூறி நிற்கின்றன. அவற்றிலே எதனைச் சிறந்ததெனத் தேர்வது?

இறைவன் உண்மையை ஒப்புக் கொள்கின்ற சித்தாந்தங்களை மட்டும் எடுத்துக் கொள்வோமேயானால் நம்முடைய பணி எளிதாகிறது. ஒருவனை இறைவனுக்கே சித்தாந்தங்கள் பலவற்றாலும் பற்பல விதமான விளக்கங்கள் அளிக்கப் பெற்றுள்ளன. எனவே, விளக்கங்கள் பலவாயினும் அவற்றால் விளக்கப்படும் இறைவன் ஒருவனே. அவனை 'அழகிய மணவாளன்' என்றும் சொல்லலாம், 'கல்யாண சுந்தரன்' என்றும் கூறலாம். ஆனால், 'நான் எப்படி அவனை அழைப்பது' என்று ஒருவர் குறிப்பாக கேட்பாரேயானால் 'எப்படி வேண்டுமானாலும் அழைத்துவிட்டுப் போங்கள்' என்று சொல்வது நம் ஆன்ம ஒழுக்கத்திற்குப் பெருந்துணையாக அமையாது.

**திரு. வே. சோமசுந்தரம்,**
**சென்னை — 61.**

நாம் வகுத்துக் கொள்கின்ற வழிகள் பலவாக இருக்கலாம். அவை நல்லவையாக இருக்க வேண்டும் என்பதும், குற்றங் கடிந்து நல்லவையாக்கப்பட வேண்டும் என்பதும் மிகமிக முக்கியம். அதே நேரத்தில் அடிக்கடி நாம் செல்கின்ற பாதையை மாற்றிக் கொண்டே இருப்போமேயானல் சென்றடைய வேண்டிய இடத்தை ஒருபோதும் நெருங்கவே மாட்டோம் என்பதை மறந்துவிடக் கூடாது.

எனவே சைவராகப் பிறந்தவர்கள் சைவ சித்தாந்தத்தைப் பின்பற்றுவது சிறந்ததாகும். அவ்வாறே வைணவர்கள், வைணவ சித்தாந்தத்தில் ஆழங்கால்பட்ட நெஞ்சினராய் இருத்தல் நல்லது.

இனி, சைவ சித்தாந்தத்தின்படியான இறைவனின் இயல்புகளைப் பற்றிச் சிறிது சிந்திப்போம்.



ஸ்ரீ காளஹஸ்தீஸ்வரர் திருக்கோயில்-எம். ராஜ்யலட்சுமி.

ஒருவனுன இறைவனையே,

சிவன்—பார்வதி

கணபதி—சித்தி, புத்தி

முருகன்—வள்ளி, தெய்வானை

என்று பலப்பட பேசுகிறோம். இவர்களையெல்லாம் ஒரு சேர வைத்துப் பார்த்தால் ஒரே குடும்பத்தவராகக் காட்சி தரக் காணலாம். தமிழருக்கு குடும்ப அமைப்பின் மீது அசைக்க முடியாத நம்பிக்கையும், பற்றும் மிகுதியும் உண்டு. தத்தமது குடும்பத்தவரில் எவருக்கேனும் ஓர் உயர்வு வந்தால் அது எல்லோருக்கும் வந்ததாகவும், அவ்வாறே எவருக்கேனும் ஒரு தாழ்வு வந்தால் அது அனைவருக்கும் வந்ததாகவும் கொண்டு இன்பமோ, துன்பமோ கொள்வது அவர்தம் மரபு. எனவே அங்கத்தினர் பலராயினும் குடும்பம் ஒன்றே. (அதுபோல இறைவனின் வடிவங்களும், பெயர்களும் பலவாயினும் அவன் ஒருவனே) இவ்வாறுன ஒருமித்த வாழ்வினராக ஒழுகியது கருதியே, தமிழரிடையே 'மணவினையின்போது குலம், கோத்திரம் பார்க்கின்ற வழக்கமும் தோன்றியதோ?' என்பதும் சிந்தனைக்குரியதொன்று. அது எவ்வாருயினும், 'நம்மைப்போலவே இறைவனும் ஓர் இல்றைத்தானுக—குடும்பத்தவனுக — இலங்குகின்ருன்' என்ற கருத்து தமிழருக்கு மிகவும் பிடித்திருக்க வேண்டும். எனவே தான், வையகத் தலைவனுகிய அவனை ஒரு குடும்பத் தலைவனுகவும் காண்பதில் மன நிறைவு கொண்டான்.

ஆகையால், அத்தெய்வக் குடும்பத்தினரில் எவரையும் வணங்கி வழிபட்டு நாம் நலமடையலாம். எனவே, நாம் முருகனிடத்தும் முருகிய பக்தியுடையவராய் விளங்கலாம். விநாயகரிடத்தும் விழுமிய வணக்கமுடையவராய்த் திகழலாம். சிவபெருமானிடத்தும் சிந்தையைப் பறி கொடுத்தவராய் சிறப்பெய்தலாம். அன்னை பராசக்தியிடத்தும் அன்புடையோராய் ஆராதிக்கலாம் அனைத்து வழிபாடும் ஓரிறைவனையே சென்று சேர்ந்து அவனருளை நமக்குப் பெற்றுத் தந்து நலம் பயக்கின்றன.

உருவமும், நாமமும் நாமாக நம்முடைய வழிபாட்டு வசதிக்காக ஏற்படுத்திக் கொண்டவை. அவனே, ஒரு நாமம், ஒருருவம் ஒன்றுமில்லா பெரும்பேராளன், அவனை நாம் மட்டுமா இன்னுன் என்று சரியாகத் தெரிந்து கொள்ளாது திகைப்பெய்தி தவிக்கிறோம்?

"வான நாடரும் அறியொணாத நீ
மறையில் ஈறுமுன் தொடரொணாதநீ
ஏன நாடருந் தெரியொணாதநீ"

என்ற மாணிக்கவாசகப் பெருமானின் மணிவார்த்தைகளை நோக்கும்போது அவனை உள்ளபடி அறிந்தவர் ஒருவருமிலர் என்றே நினைக்கத்தோன்றுகிறதல்லவா!

இருப்பினும், இறைவன் தன்னில் தானுய் "சச்சிதானந்தம்" என்று உபநிடதங்களால் கூறப்பட்டுள்ளான். அத்தொடரைப் பிரித்தால், "சத்து—சித்து—ஆனந்தம்" என்ருகும். சத்தும், சித்தும், ஆனந்தமும் சேர்ந்ததேயாகும்.

சிவமே உள் பொருள்; உண்மையான பொருள். மாற்றம் ஏதுமின்றி



ஸ்ரீ விருபாக்ஷி கோயில்-ஹம்பி.-எம். ராஜ்யலட்சுமி.

சத்தைக் குறிக்கிறது. இறைவன் பேரின்பப் பெரியோன் என்னும்போது ஆனந்தத்தைக் கோடிட்டுக் காட்டுகிறோம். அவனே முற்றும் உணர்ந்தவன். இயற்கை உணர்வினன், பேரருள் உடையோன், பெரும் ஆற்றலான் என்ற நான்கு தன்மைகளாலும் சுட்டப்பெறும்போது சித்தின் விரிவு விளங்கக் காணலாம்.

மேற்கூறிய ஆறு குணங்களோடு; தூய்மையானவன், பாசப் பிணிப்பற்றோன் என்ற சத்தின் விரிவாகிய இரு தன்மைகளும் சேர்த்து இறைவன் எண் குணத்தவன் என்றும் சொல்லப் படுவன். திருக்குறளிலும் இறைவன் எண் குணத்தவனாகக் கூறப்பெற்றுள்ளான். திருக்குறள் சுட்டும் 'எண் குணத்தான்' சைவம் கூறும் எட்டு குணங்களையும் கொண்டவனே என்பது விவாதப் பொருளாயிருக்கலாம். ஆனால் சைவத்தின் எண் குணத்தானுக்கும், திருக்குறள் இடமளித்திருப்பது கருதத்தக்கது.

இறைவன் எல்லாமாகியும் எல்லையில்லாதவன்; எவற்றையும் தோற்றுவித்தும் தனக்கோர் தோற்றமில்லாதவன்; எவ்வுயிரையும், எப்பொருளையும் அழிக்கும் ஆற்றலுடையவனாயினும் தனக்கோர் முடிவற்றவன்; ஐம்புலன் நுகர்ச்சியை ஆருயிர்கட்கு அளிப்பவனாயினும் அவற்றால் தான் கட்டுப்படாதவன். இத்தகைய இறைவனின் அருந்தன்மைகளை அழகாக் கூறிப் போற்றுகிறார் மாணிக்க வாசகர். அப்பாடலை நாம் பாடிப் பரவலாம்:

" போற்றியிப் புவன நீர்தீக்
காலொடு வான மானாய்
போற்றியெவ் வுயிர்க்குந் தோற்ற
மாகிநீ தோற்ற மில்லாய்
போற்றியெல் லாவு யிர்க்கும்
ஈறாய் றின்மை யானாய்
போற்றியைம் புலன்கள் நின்னைப்
புணர்கிலாப் புணர்க்கை யானே "

சச்சிதானந்தமாகிய இறைவன் தன்னில் தான் நிற்றலாகிய சொரூப

ஒன்றே பரம்பொருளென' ஒப்பற்று ஓர் நிலைத்ததாய் நின்று நிலைத்திருக்கும் பொருள். இதுவே சத்து என்ற தொடரின் பொருளாகும். பிறப்பிலி பெருமானை நோக்க, மாறி மாறிப் பிறந்திறந்து மாற்றமும், நிலையற்ற தன்மையுமே கொண்டிலங்கும் ஏனைய உயிரினங்கள் அசத்து எனப்படுவது சரிதானே!

அடுத்தான இறைவனின் தன்மை, அவன் சித்தானவன் என்பதாகும். சித்து என்றால் அறிவு. அதுவும் எப்பேர்பட்ட அறிவு? அவனது அறிவுக்கோர் அடைவு கூறவே நம் சிற்றறிவால் ஆகாது. அவன் முழுதுணர்ந்த பெரியோன். முக்காலமும் தேரவல்ல முழுமுதல்வன்; எவையும், எல்லாமும், எப்போதும் அறியவல்ல எம்பெருமான். அவனது அறிவிற்கு முன் எவருடைய அறிவும்-ஏன்-மற்றெல்லாருடைய அறிவின் கூட்டும் சிற்றறிவாகவே முடியும்.

முன்னோனின் மூன்றுவதான தன்மை ஆனந்தமாகும். அவன் அருள் தரவரும் ஆனந்தமலை. தேனாய் இன்னமுதமாய்த் தித்திக்குஞ் சிவ பெருமான்; பேரின்பமே தம்முடைய பெருவடிவமாய்க் கொண்ட பெருங் கருணையாளன். இன்பம் நிறைந்திருக்கும் இடத்தில் தானே பிறர் துயர் களையும் பேராற்றலும், பெருங் கருணையும் எழலாகும்?

அவனே சுகப் பெரும்பொருள். அவனது சுக சொரூபத்தை விளக்கும் இராமலிங்க அடிகளாரின் சுகமான பாடலடிகளைக் கீழே காணலாம்:

" மெய்ச்சுகமு முயிர்ச்சுகமு மிகுங்
கரணச் சுகமும்
விளங்குபதச் சுகமுமதன் மேல்
வீட்டுச்சுகமும்
எச்சுகமுந் தன்னிடத்தே யெழுந்த
சுக மாக
எங்கணுமோர் நக்கமற வெழுந்த
பெருஞ் சுகமே "

உபநிடதங்கள் சச்சிதானந்தம் என்றுரைத்ததையே சைவ ஆகமங்கள் ஆறு தன்மைகளாகவும், எண் குணங்களாகவும் விரித்துரைத்துள்ளன.

இறைவனின் ஆறு தன்மைகளாவன: தன் வயமானவன், முற்றும் உணர்ந்தவன், இயற்கையுணர்வினன், பேரருளாளன், எல்லையற்ற ஆற்றலான், பேரின்பப் பெரியோன். இவற்றில் தன் வயமானவன் என்பது

இலக்கணம் அல்லது உண்மை இயல்பு என்பதிலேயே நிலைத்திருந்தால் உயிர்கள் உய்வடைய முடியாது. எனவே அவன் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐந் தொழில்களிலும் ஈடுபட்டு உயிர்த் தொகையின் ஈடேற்றத்திற்கு உதவுகிறான். சொரூப நிலையில் 'சிவம்' என்றழைக்கப்பட்ட பதியாகிய சிவம், ஐந்தொழில் ஆற்றத் தலைபடுதலாகிய தடத்த நிலையில் 'சக்தி' எனப்படும். எனவே சிவமும், சக்தியும் வேறுவேற ல்லர் என்பது புலப்படும். சிவமே சக்தி. சக்தியே சிவம். ஒன்றே இரண் டாக இருவேறு நிலைகளில் கூறப்படும். சக்தி மனைவியென்றால் சிவம் கணவன். பரம்பொருள் விளக்கத்திலும் செய லாக்கத்தினைத் தருபவள் சக்தி. சக்தி குணமென்றால் அக்குணத்தை உடை யவன் சிவன்.

ஒரே சொல்லால் இறைவனின் தன்மையைப் பகர்வோமென்றால், அது அருள், அருள், அருள் என்ப தொன்றேயாகும். அருளே சிவம் என்பதை அருட்பிரகாச வள்ளலார் பலபடக் கூறுமாற்றை நோக்கினால் நமக்குத் தெளிவு பிறக்கும். இதோ, அவர் அருள் வாக்கினின்றும் சில அடிகள் :

"அருளே நம்மிய லருளே நம்முரு
அருளே நம்வடி வாமென்ற சிவமே

அருளே நம்மடி யருளே நம்முடி
அருளே நம்நடு வாமென்ற சிவமே

அருளே நம்மறி வருளே நம்மனம்
அருளே நம்குண மாமென்ற சிவமே

அருளே நம்பதி யருளே நம்பதம்
அருளே நம்மிட மாமென்ற சிவமே

அருளே நந்துணை யருளே நந்தொழில்
அருளே நம்விருப் பாமென்ற சிவமே

அருளே நம்பொரு ளருளே நம்மொளி
அருளே நாமறி வாயென்ற சிவமே

அருளே நங்குல மருளே நம்மினம்
அருளே நாமறி வாயென்ற சிவமே

அருளே நங்குல மருளே நம்மினம்
அருளே நாமறி வாயென்ற சிவமே

அருளே நஞ்சுக மருளே நம்பெயர்
அருளே நாமறி வாயென்ற சிவமே"

அருளே சிவமாம் என்பது எங்ஙனம் பொருந்தும் என்றால், எல்லையிலாற் றலும், முடிவில் இருப்புமுடைய இறைவன் பாசப் பிணிப்புடைய சின்னோர் வாழ்வினராகிய உயிர்கள் கடைத்தேற உதவியே ஆகவேண்டு மென்ற கட்டாயம் ஏதுமில்லை. அவன் நினைத்தால் தன்னில் தானாய் சொரூப நிலையிலேயே வீற்றிருக்க முடியும். ஆனால் அவனோ அகில உயிர்களனைத்தும் நற்பேறடைய வேண்டுமென்ற கருணையுள்ளத்தவனாய் தடத்த நிலையிலிருந்து ஐந் தொழிலாற்றி அருள் புரிகிறான். எனவே அவனினும் பெரிய பேரருளாளன் வேறு யாருமிருக்க முடியாது.

சைவ சித்தாந்தப்படி பதி, பசு, பாசம் ஆகிய மூன்றுமே என்றும் உள்ள பொருள்கள். பதி என்பவன் நாம் இதுகாறும் அறிய முயன்ற இறைவன். பசு என்பது உயிர்க் கூட்டத்தையும் பாசம் என்ற சொல் அவ்வுயிரினத்தைப் பற்றியிருக்கும் ஆணவம், கன்மம், மாயை என்ற மூவகைக் குற்றங்களையும் குறிக்கும். பதியைப் பற்றிய அறிவு கைவரப் பெற்ற பசு பாசங்களினின்றும் நீங்கிய நிலையில் சிவபதம் சேர்கிறது. எனவே இறைவனின் இயல்பறிவது உயிர்களுக்கு அவனின் திருப்பாத போதனைவதற்கு உறுதுணையாகும். அது எவ்விதமென்றால், எத்தகைய கொடும் பாவம் எத்தனையோ செய்தவனுக்கும் இறைவன் எளிதில் அருள வரும் தயாள குணம் படைத்தவன் என்பதை அறிய வரும்போது அக் கொடும்பாவியின் கைகளும் இறை வனை நோக்கிக் கும்பிடுமல்லவா ?

நாம் இதுவரையிலும் கண்டவற்றி னின்றும், "இறைவன் எங்கும் நிறைந்தவன்; எல்லாம் ஆனவன்; சத்து, சித்து, ஆனந்தமாய் இருப்பவன்; தமக்கே உரியவனென சமயங்களெல்லாம் உரிமை கொண்டாடவும், அவரவர் விரும்பிய வடிவிலேயே வந்து அருள் பாலிப்பவன்" என்பன வற்றை ஒருவாறு உணரலாகும். அவனே நமக்கெல்லாம் வாய்த்த தனிப்பெருந் தலைவனான தயாநிதி. எனவே அவன் திருவடிகளைப் போற்றி வணங்கி உய்வடைவோமாக.

"அங்கிங்கெனாதபடி யெங்கும்ப்ர காசமா
யானந்த பூர்த்தியாகி
யருளொடு நிறைந்ததெது தன் னருள் வெளிக்குளே
யகிலாண்டகோடியெல்லாந்
தங்கும்படிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த்
தழைத்ததெதுமனவாக்கினிற்
றட்டாமனின்றதெது சமய கோடிக ளெலாந்
தந்தெய்வமெந்தெய்வமென
றெங்குந் தொடர்ந்தெதிர் வழக் கிடவு நின்றதெது
வெங்கணும் பெருவழக்காய்
யாதினும் வல்லவொரு சித்தாகி யின்பமா
யென்றைக்கு முள்ள தெது மேற்
கங்குல்பகலற நின்ற வெல்லையுள தெதுவது
கருத்திற்கிசைந்தததுவே
கண்டனவெலாமோன வுருவெளிய தாகவுங்
கருதியஞ்சலி செய்குவோம்"

— தாயுமான சுவாமிகள்.



# சீர்காழியும் ஞானக்குழந்தையும்



முத்து சட்டைநாதர்

தஞ்சை மாவட்டத்தில் உள்ள திருத்தலங்களில் சீர்காழிக்குத் தனிப் பெருமையுண்டு. ஏனெனில் அது 'ஞானக் குழந்தை பிறந்த ஊர்', 'தேவாரம் பிறந்த ஊர்'. இத்தலம் தென் இருப்புப் பாதையில் ஒருபுகை வண்டி நிலையமாகவும் அமைந்துள்ளது. இத்தலத்திற்கு நான் பல முறை சென்றிருந்தாலும் சுமார் 25 ஆண்டுகளுக்கு முன் என் ஆசிரியர் திரு. கி. வா. ஜவுடன் சென்றதையே மிகச் சிறப்பாகக்கருதுகிறேன். பல விஷயங்களைக் கண்டும் கேட்டும் அறிந்து கொண்டேன். பல புகைப் படங்கள் எடுத்தேன். சேக்கிழார் பெருமான் பெரிய புராணத்தில் இத்தலத்தை மிக அழகாக வருணித்துள்ளார்.

சீர்காழிக்குப் பன்னிரண்டு திருநாமங்கள் உண்டு. சீர்காழி என்று சொல்லுவதைவிட சீகாழி என்று சொல்லுவதுதான் முறை என்று தெரிந்து கொண்டேன். இத்தலத்தில் பத்திரகாளி சிவபெருமானை பூஜை செய்து வரம் பெற்றுளாம். அதனால் ஸ்ரீ காளிபுரம் என்ற பெயர் ஏற்பட்டதாம். பின்பு நாளடைவில் ஸ்ரீ காளிபுரம் தேய்ந்து சீர்காழி என்று ஆகிவிட்டதாம். இதன் பழைய பெயர் கழுமலம். கழுமல் நாடு என்று ஒரு நாடும் இருந்ததாம். அதன் தலை நகரம்தான் இந்த ஊர். திருஞான சம்பந்தர் தன் தேவாரத்தில் இந்த ஊரைக்கழுமலம்என்றே கூறுகின்றார்.

சீர்காழிக்குப் பெருமை ஞானக் குழந்தை பிறந்ததால். சுந்தரமூர்த்தி சுவாமிகள் இந்த ஊருக்கு வந்தபோது 'ஆளுடைப் பிள்ளையார் திரு அவதாரம் செய்த இத்தலத்தை நான் மிதிக்க மாட்டேன்' என்று ஊரை வலம் வந்து வெளியே நின்று வணங்கினாராம். இந்தத்தலத்துக்குரிய புராணம் 1550 பாடல்களால் ஆனது. கோவிலைச் சார்ந்த அக்ரஹாரத்தில் திருஞானசம்பந்தர் பிறந்தார். அவர் பிறந்த தெருவிற்குத் திருஞான சம்பந்தர் தெரு என்று பெயர் வைத்துள்ளார்கள். அவர் பிறந்த வீடு காஞ்சி காமகோடி பீடம் பரிபாலனத்தில் உள்ளது. இங்குக் குழந்தைகளுக்குத் தேவாரப் பயிற்சி அளிக்கப்படுகின்றது. அந்தத் தெருவின் கோடியில்தான் சோளீச்சுவர் கோவில் உள்ளது. அங்குதான் ஞான சம்பந்தருடைய தந்தையார் பூஜை செய்து வந்தாராம். அம்பிகையின் பெயர் சூளிகாம்பிகை திருஞான சம்பந்தரின் தந்தையார் சிவபாத இருதயர் வழக்கம் போல காலையில் நீராடச் சென்றார். பெரிய கோவிலில் உள்ள பிரம்மதீர்த்தத்தில் அவர் நீராடுவது வழக்கம். கூடவே மூன்று வயது குழந்தையும் சென்றது.

திரு. எஸ். இராமகிருஷ்ணா
மயிலாடுதுறை

சிவபாத இருதயர் நீராடப் புகுந்தார். குழந்தை கரையிலே நின்று கொண்டிருந்தது. தந்தையார் மந்திரம் ஜபித்து நீரில் மூழ்கினார். அப்போது குழந்தை பார்த்தது. தந்தையாரைக் காணவில்லை. சுற்றுமுற்றும் பார்த்துக்குழந்தை அழுதது. 'அம்மா அப்பா' என்று கூறி அழுதது. அதனுடைய அழுகைக்காகக் காத்திருந்த அம்மையப்பர் அம்பிகையுடன் எழுந்தருளினர். உமாதேவியார் பொற்

கிண்ணத்தில் திருமுலைப்பாலைக்கறந்து குழந்தைக்கு ஊட்டியருளினார். அது மெய்ஞானப் பாலாதலால் குழந்தைக்கு உடனே சிவஞானம் உண்டாகிவிட்டது. ஞானப்பிள்ளை ஆனான்; திருஞானசம்பந்தப் பெருமானாக மாறினான்.

பாலை வழங்கியவுடன் தோணியப்பரும் அம்மையும் மறைந்துவிட்டார்கள். குழந்தை வாயிலே பாலொழுக நின்று கொண்டிருந்தான். தந்தையார் நீரிலிருந்து வெளியே வந்தார். வாயில் வழியும் பாலோடு நின்ற குழந்தையைக் கண்டு 'உனக்கு யார் பால்கொடுத்தார்கள்' என்று கேட்டுக் கோபம் கொண்டார். குழந்தை பதில் சொல்லிற்று. வார்த்தையால் அல்ல. 'அதோ அந்தக் கள்வன்தான்' என்று விரலாலே சுட்டிக்காட்டியபடி பாடினார். தேவாரத்தில் முதல் பாடல் பிறந்தது.

"தோடுடைய செவியன் விடை ஏறிஓர்
தூவெண் மதிசூடிக்
காடுடைய சுடலைப் பொடி பூசி என்
உள்ளம் கவர் கள்வன்


திருஞானசம்பந்தர்

ஏடுடைய மலரான்முனை நான்பணிந்து
ஏத்த அருள் செய்த
பீடுடைய பிராம்புர மேவிய
பெம்மான் இவன் அன்றே!"

தகப்பனார் பிரமித்துப் போனார். அவர் சிறந்த சிவ பக்தர். இறைவன் திருவருளை எண்ணி ஆனந்தக் கண்ணீர் வடித்தார். அன்று முதல் திருஞான சம்பந்தர் சிவபக்தியைப் பரப்பினார்.

சீர்காழித் திருக்கோவிலில் ஞான சம்பந்தருக்குத் தனியே ஒரு ஆலயம் இருக்கின்றது. அங்கே சம்பந்தப்பெருமாள் இலிங்க வடிவிலும் விக்ரகமாகவும் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளார். லிங்கம் இருப்பதால் அம்பிகைக்கு சந்நிதி உண்டு.

திருக்கோயில் கிழக்கு நோக்கிய சந்நிதி உடையது. முதலில் பிரம்ம புரீசர்சந்நிதி. அதற்குப்பின கட்டுமலையின்மேல் தோணியப்பர் சந்நிதி இருக்கின்றது. அம்பிகையின் கோவில் பிரம்ம தீர்த்தக்கரையில் உள்ளது. இந்த இரண்டு கோவில்களுக்கும் இடையில் திருஞான சம்பந்தர் கோவில் உள்ளது.

திருஞான சம்பந்தருடைய உற்சவ விக்ரகம் மிகவும் அழகாக உள்ளது. இடக்கையில் பால் கிண்ணமும் வலக்கையில் சற்றே நீட்டிய சுட்டு விரலும் உள்ள கோலத்தில் ஞான சம்பந்தர் காட்சி அளிக்கின்றார். பால் குடித்த இன்ப நிலையை முகம் காட்டுகின்றது! இந்தப் படிமம் மிகவும் புராதன காலத்ததாகக் காணப்படுகின்றது.

சித்திரை மாதம் பிரம்மோற்சவம் நடைபெறும். இரண்டாம் நாள் திருமுலைப்பால் சிறப்புத் திருவிழா நடைபெறும். தோணியப்பரும் பெரிய நாயகியும் எழுந்தருளி ஞான சம்பந்தருக்குப் பால் வழங்கும் காட்சி அற்புதமாக இருக்கும். ஞான சம்பந்தர் சிவிகையில் எழுந்தருளுவார். பிரம்ம தீர்த்தக் கரையின் தென் கரையில் திருமுலைப்பால் வழங்கும் காட்சி தருமை ஆதீனகர்த்தர் முன்னிலையில் நிகழும். சம்பந்தருக்கு நிவேதனம் செய்யும் பாலை மக்கள் பிரசாதமாக பெற்றுச் செல்வர்.

இந்த விழாவில் அனுபவம் நிறைந்த ஓதுவார்மூர்த்தி ஒருவருக்கு தரும புரம் மகா சந்நிதானம் 'திருமுறைக் கலாநிதி' என்ற பட்டம் வழங்குவார்கள்.

கோவிலின் மற்ற பகுதிகளைப் பார்க்க வேண்டாமா? வாருங்கள் பார்க்கலாம்!

சீர்காழியில் மூலலிங்கத்திற்கு பிரம்ம புரீசர் என்று பெயர். ஆனால் கோவிலின் பெயர் சட்டை நாதர் தேவஸ்தானம் என்று வழங்கப்படுகின்றது! சட்டை நாதர் உருவம் தோணியப்பர் கோவிலில் ஒரு மூலையில் உள்ளது. கோவிலில் பிரம்ம புரீசர் சந்நதிக்குப் பின்னே ஒரு கட்டுமலை இருக்கின்றது. அந்த மலையில் தோணிபுரேசர் எழுந்தருளியிருக்கின்றார். பிரளய காலத்தில் உலகமெல்லாம் நீரில் மூழ்கிவிட்டது. மறுபடியும் உலகத்தைப்படைக்க சிவ பெருமாள் திருவுளம் கொண்டான். பிரணவத்தை தோணியாகக் கொண்டு உமாதேவியுடன் மிதந்து வந்தார். ஓர் இடத்தில் தோணிமிதந்து நின்றது. உடனே இங்கு நிலையாக எழுந்தருளினார். இந்த மலை கைலாய மலையின் சிகரமென்றும், அதை 'இருபது பறவைகள்' தாங்கி நின்றன என்றும் புராணம் கூறும் (நாலஞ்சு புள்ளினம் ஏந்தின தென்பர் - அப்பர் சுவாமிகள்) மலையில் உள்ள உமை பாகனுடைய திருஉருவம் மிகவும் பெரியது.

உமாபாகர் சந்நிதியை வலம் வந்து மற்றொரு சிறியபடிக்கட்டில் ஏறினால் சட்டை நாதர் சந்நிதிக்குப் போகலாம். சட்டை நாதர் மிகவும் சக்தியுள்ள தெய்வம். சட்டை நாதர் பைரவமூர்த்தி. தோலால் அமைந்த சட்டை அணிந்து, எலும்புகள் முறுக்

## சந்தாதாரர்களுக்கு....

30-4-89—ஆம்தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். 'ஆசிரியர்' ஸப்தகிரி, தி.தி.தே. திருப்பதி. எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

*15 21 34 44 107 108 177 178 181 301 302 303 307 516 526 638 639 640 643 647 648 649 652 654 667 1263 1266 1271 1297 1412 1438 1447 1460 1473 1485 1488 1491 1518 1538 2835 2844 2846 2857 2858 2862 2864 2872 2880 2885 2887 2888 2889 2891 2898 2899 2906 2907 2909 2910 2911 2913 2916 2918 2920 2921 2922 2923 2924 2928 2930 2931 2933 2935 2942 2946 2952 2953 2961 2967 2969 2970 2971 4092 முதல் 4131 4138 4139 4141 முதல் 4154 4156 முதல் 4198 4200 முதல் 4204 4207 முதல் 4216 4218 முதல் 4222 .*

கிய தண்டை ஏந்தியுள்ளார். ஒவ்வொரு வெள்ளிக்கிழமை நடு இரவில் பூஜை நடைபெறும் அப்போது புனுகு சாத்துவார்கள்.

கோவில் பிரகாரத்தை சுற்றியுள்ள தாழ்வாரத்தில் திருமாளிகைப் பத்தியில் முத்துச்சட்டை நாதர் உள்ளார். பக்கலில் பலி பீடம் உள்ளது. அங்கிருந்து மேலே பார்த்தால் சட்டை நாதர் சந்நிதி தெரியும். பலிபீடத்திற்கே தினமும் பூஜை நடைபெறும் கோவிலில் பல சிற்பங்கள் உள்ளன.

அம்பிகையின் பெயர் திருநிலை நாயகி. ஸ்திர சுந்தரி என்று வடமொழியில் கூறுவர். அம்பிகையின் கோவிலுக்கு முன் பிரம்ம தீர்த்தம் உள்ளது. சிவபெருமானுக்கும் அம்பிகைக்கும் நடுவில் சோமஸ்கந்தர் வீற்றிருப்பது போல் இங்கு இறைவனுக்கும் இறைவிக்கும் நடுவில் ஞான சம்பந்தர் வீற்றிருக்கின்றார். திருஞானசம்பந்தர் முருகனுடைய திரு அவதாரம் என்று கொள்வது ஒரு மரபு.

மற்றொரு சிறப்பும் இக்கோவிலுக்கு உண்டு. குரு, லிங்க, சங்கமம் என்று ஒரு வகை அடுக்கு உண்டு. குரு என்பது ஞானாசிரியரை குறிக்கும். லிங்கம்-இறைவன். அடியாரை-சங்கமம் என்பர். பலருக்கு ஞான உபதேசம் செய்தவர் உமாபாகர் குருமூர்த்தி.

இக்கோவிலில் பல கல்வெட்டுகள் உள்ளன. 47 உள்ளதாக கணக்கெடுத்துள்ளனர். இவைகளிலிருந்து பல செய்திகளை அறியலாம்.

வீர ராஜேந்திரம் (கி.பி. 1055-1070) முதல், கிருஷ்ண தேவராயர் (கி.பி. 1509) வரை பல அரசர்களின் கல்வெட்டுகள் உள்ளன.

திருஞான சம்பந்த சுவாமிகளின் திருப்பதிகங்கள் அறுபத்தேழும், நாவுக்கரசரின் பதிகங்கள் மூன்றும், சுந்தரர் திருப்பதிகம் ஒன்றும் இத்தலத்திற்கு உள்ளன. திருவாசகத்திலுள்ள பிடித்த பத்தும் இத்தலத்தில் அருளிச் செய்ததே.

வலம்புரி மண்டபத்தில் அஷ்ட பைரவர்கள் வீற்றிருக்கின்றார்கள்.

இத்தலத்தில் 22 தீர்த்தங்கள் உள்ளன.

இத்தலத்தில் அநேக தொண்டர்கள் வாழ்ந்திருந்தார்கள்-ஞான சம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள், மாணிக்க வாசகர், பட்டினத்தடிகள், நம்பியாண்டார் நம்பி, சேக்கிழார், அருணகிரி நாதர், அருணந்தி சிவாச்சாரியார், சிவஞான தேசிகன், அருணசலக் கவிராயர் மற்றும் எவ்வளவோ பேர். ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிக சுவாமிகள் (தருமை ஆதீனம் 10வது சந்நிதானம்) 'ஆபதுத்தாரணர் மாலை' அருளிச் செய்துள்ளார்.

பிரம்மோற்சவம் முடிந்த சுக்ர வாரத்தன்று உற்சவர் ஸ்ரீ முத்துச் சட்டை நாத சுவாமிக்கு ஏகதின விசேஷ உற்சவம் நடைபெறும். சீர்காழி அன்பர்கள்சுவாமி புறப்பாட்டில் விசேஷமாக கலந்து கொள்வார்கள். 'வாருங்கள் பார்க்கலாம்' என்ற நூலில் கலைமகள் ஆசிரியர் திரு. கி. வா. ஜ. அவர்கள் இத்தலம் பற்றி மிகச் சிறப்பாக எழுதியுள்ளார்கள். தருமை ஆதீனம் இத்தலம் பற்றி ஒரு தல வரலாறு வெளியிட்டுள்ளது. இவைகளை ஆதாரமாகக் கொண்டு இக்கட்டுரை எழுதப்பட்டுள்ளது.



# தி. தி. தேவஸ்தானத்தாரின்
# அரும்பொருட் காட்சியகம்

இந்து சமயத்தின் பெருமையினையும், இந்திய மண்ணில் கலாசார அருமையினையும் பிறருக்கு எடுத்துக் காட்டி, அவை மேலும் சிறப்புறும் வகையில் நாளைய இந்தியனைச் சிந்திக்க வைக்கும் ஒரு வாய்ப்பாக, தி. தி. தே. மேற்கொண்டு வரும் பல முயற்சிகளில் ஒன்றாகத் திகழ்வது தற்போது மேலாண்மையினால் அமைக்கப்பட்டிருக்கும் அரும்பொருட் காட்சியகங்கள்.

தற்போது திருமலையில் கோயிலுக்கெதிரில் உள்ள ஆயிரங்கால் மண்டபத்தில் செயல்பட்டுக் கொண்டிருக்கும் அரும்பொருட்காட்சியகமானது 27-12-80 அன்று முன்னாள் இந்தியக் குடியரசுத் தலைவர் திரு. என். சஞ்சீவி ரெட்டி அவர்களால் திறக்கப்பட்டது. இங்கு திருப்பதி மற்றும் அதைச் சுற்றியுள்ள இடங்களில் கண்டெடுக்கப்பட்டுள்ள பழங்கால நினைவுச் சின்னங்கள், கோயில்கள் சம்பந்தப்பட்ட வேலைப்பாடுகள், சிற்பங்கள், வைதிகச் சடங்கு முறைகள் யாவும் காட்சிக்கு வைக்கும் எண்ணத்தில் இக்காட்சியகம் உருவாக்கப்பட்டுள்ளது. மேலும் தி. தி. தேவஸ்தானத்தாரிடமும், மற்றைய இடங்களிலும் சேகரிக்கப்பட்ட மர வேலைப்பாடுகள், விக்ரகங்கள், உலோக உருவமைதிகள், இசைக்கருவிகள், போர்க்கருவிகள் இக்காட்சியகத்தில் இடம் பெறச் செய்யும் முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டன. மறைந்த அறிஞர் திரு. வேட்டூரி பிரபாகர சாஸ்திரி அவர்கள் ஆந்திர நாட்டு பல ஜமீந்தார்களிடமிருந்து சேகரிக்கப்பட்ட பொருட்களும் இவ்வகத்தை அலங்கரிக்கின்றன.

மற்றொரு அரும்பொருட் காட்சியகம் (எஸ். வி. கோயிற்கலை காட்சியகம்) வைணவ நெறிமுறைகளைச் சித்தரித்திடும் வகையில் திருப்பதியில் ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி வடக்கு மாட வீதியில் கச்சேரி நம்மாழ்வார் கோயிலுக்கருகே பெரியாழ்வார் மண்டபத்தில் அமைந்துள்ளது. இக்காட்சியகத்தில் வைணவப் பிரிவின் ஆதியும், அதன் வளர்ச்சியும், சிற்பக்கலை, கோயிற்கலை, உருவமைதிகள், ஆழ்வார்கள், திவ்ய க்ஷேத்ரங்கள் மேலும் மற்றைய கலைகள் சம்பந்தப்பட்ட பொருட்கள் இடம் பெற்றுள்ளன.

**வைணவத்தின் ஆதியும் அதன் வளர்ச்சியும் :**

இப்பிரிவில் வைணவ மதத்தின் தொன்மை விளக்கப்பட்டுள்ளது. மகாவிஷ்ணு என்று வேதத்தாலும், ஸ்ரீமந் நாராயணன் என்று உபநிஷத்துக்களாலும் ஏற்றப்பட்டு வளர்ந்த திருமால் வழிபாட்டு வரலாறு விளக்கப்பட்டுள்ளது. இத்திருமால் வழிபாடு இன்று நாடு முழுவதும் 200 வழி நிலைகளில் போற்றப்படுகின்றது. வைகாணஸம், பஞ்சராத்ரம் என்ற ஆகம முறைகளில் தென்னாட்டில் வழிபடப்பட்ட வைணவம் பற்றிய வளர்ச்சி, அட்டவணை முறையில் விளக்கப்பட்டுள்ளது. தொன்மை மிக்க வைணவத் திருத்தலங்களில் காணப்பட்ட சித்திரங்களும், 15-வது நூற்றாண்டைச் சார்ந்த அரிய சிற்ப உருவமைதிகள் குறிப்பாக நாகலாபுரம் திருக்கோயிலில் கிடைக்கப் பெற்றவைகளும் இங்குக் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.

**கோயில் நிர்மாண விளக்கங்கள் :** ஆகம மற்றும் சிற்ப இலக்கணப்படிக் கட்டப்பட வேண்டிய கோயில் அளவு முறைகள், கோயில் கட்டுவதற்கு இடம் தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய நியதிகள், முறைகள் ஆகியன படங்கள், மாதிரிகள் மூலம் விளக்கப்பட்டுள்ளன.

**சிற்ப அளவு முறைகள் :** ஆண், பெண் சிற்ப உருவமைதிகள் எந்த அளவு முறைகளில் இருந்திடல் வேண்டும் என்ற விளக்கங்கள் இங்கு இடம் பெற்றுள்ளன.

**சிற்பங்கள் :** விஷ்ணுவின் திருவுருவ அமைதிகள், எந்தெந்த உருவமைதிகளுக்கு எந்தெந்த வகையான ஆடை, ஆபரணங்கள் இருந்திடல் வேண்டும் என்பதை இப்பிரிவு தெளிவுற எடுத்துக் காட்டுகின்றது.

**ஆழ்வார்கள் :** தென்னாட்டில் வைணவம் தழைத்தோங்க வகை செய்த ஆழ்வார்கள் மற்றும் விசிஷ்டாத்துவைதக் கொள்கையின் தந்தையான ஸ்ரீராமானுஜரின் வைணவத் தொண்டின் சிறப்பு இங்கு விளக்கப்படுகின்றது.

**வைதிகச் சடங்குகள் :** அஷ்டதஸ சம்ஸ்காரங்கள் இப்பரிவில் விளக்கப்படுகின்றன. பிறப்பு முதல் இறப்பு வரை ஒவ்வொரு இந்துவும் கடைப்பிடிகக வேண்டிய வைதீக சடங்கு முறைகள் வலியுறுத்தப்படுகின்றன கோயில் வழிபாட்டின முக்கியத்துவம் இங்குச் சித்தரிக்கப்படுகின்றது. வைணவக் கோயில்களில் பயன்படுத்தப்படும் பாத்திரங்கள், வாகனங்களின் மாதிரிகளும் இங்குக் காட்சி அளிக்கின்றன.

**108 திருத்தலங்கள் :** 108 வைணவத் திருப்பதிகளில் உள்ள கோயில்களின் கட்டிடச் சிறப்பு, சிற்பச் சிறப்புகள் போன்றவற்றைத் தெரிந்து கொள்ளும் வகையில் 108 கோயில்களின் புகைப்படங்கள் இங்கு இடம் பெற்றுள்ளன.

**கலைகள் :** இப்பிரிவில் திருமாலின் புகழ் பாடிய மெய்யடியார்களின் சிறப்பு தெரிவிக்கப்பட்டுள்ளது. நாட்டியக் கலையின் சிறப்பும் இங்கு விளக்கப்பட்டுள்ளது. மேலும் கி. பி 8-ஆம் நூற்றாண்டு காலத்திலிருந்து நவீன காலம் வரை சேகரிககப்பட்ட விஷ்ணு, சக்தி, ஷண்முகர் போன்ற பல்வேறு கடவுளர்களின் உருவமைதிகள் இங்கு இடம் பெற்றுள்ளன. குண்ட்ரபாக்கத்தில் 3வது ராஜராஜன் கோயிலிலிருந்து எடுக்கப்பட்ட சேகரிப்புகள் இப்பகுதியின் வரலாற்றைச் சிறப்புறக் கூறும்.

**அனுமதி நேரம் :** காலை 8 மணி முதல் இரவு 8 மணி வரை
**அனுமதிக் கட்டணம் :** பெரியோர்: ரூ. 1/- சிறுர்: 0-50

பொறுப்பாளர்,
**எஸ். வி. அரும்பொருட் காட்சியகம்**
**தி. தி. தே. திருப்பதி.**

**Edited Published on behalf of T. T. Devastanams by K. Subba Rao, M. A. and Printed at T. T. D. Press.**
**By M. Vijayakumar Reddy, Manager, T. T. D. Press, Tirupati-517 507.**

